வெளியீடு எண் 220.

# சிவப்பிரகாசம் சீர்மைக்கட்டுரை

[மூன்றாஞ்சூத்திரம் — ஆன்மஇலக்கணம்]





திருவாவடுதுறை ஆதீனம்

1966

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ ஆனந்த நடராஜப்பெருமான்

# அபிஷேக மலர்

பராபவ — மார்கழி — திருவாதிரை




திருவாவடுதுறை ஆதீனம்

28—12—66

வெளியீடு எண் 120.



உ
சிவமயம்

கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதிதேவநாயனுர்
அருளிச்செய்த

# சிவப்பிரகாசம் நூலின் சீர்மைக்கட்டுரை

## உண்மை அதிகாரம்

[மூன்றும்சூத்திரம் - ஆன்ம இலக்கணம்]

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

திருவாவடுதுறை ஆதீனம்
1966

73-2

உ

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

## ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்

பண்இசைவெம் பரிதிமதி திலதயிலம்
தீஇரும்பு பாணி உப்பு
விண்அனிலம் உடலுயிர்நீர் நிழல்உச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பால்நீர்
கண்இரவி உணர்வொளிபோல் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனைஆண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

21-வது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள்

என்னன்பைத் தான்விழுங்கி
　　இன்னருளைத் தான்வழங்கி
மன்னுபெரும் பாசத்தை
　　மற்றையஎன் பசுத்தன்மை
வன்மைமலம் பேதித்தே
　　வாழ்வித்தற் காத்துறைசை
முன்னியசுப் பிரமணிய
　　முதல்வரையான் பணிவேனே.

—தே. ஆ. ஸ்ரீ.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமண்ணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

சிவமயம்

# நன்றியுரை

## குருத்துதி

ஆன்மத் தன்மை ஐந்தவத்தை
அறிவைக் கிளர்த்தல் அரனார்தம்
மேன்மைத் திறமை முத்திறமை
மிகுமைந் தெழுத்தின் நிலைமைகள்
தான்முன் சிவத்தாற் கூடிக்கொள்
தகுந்த முத்திக் கலப்புண்மை
வான்செய் இவைஒன் பதும்வழங்கும்
வள்ளல் மலர்த்தாள் வணங்கிடுவாம்.

—தே. ஆ. ஸ்ரீ.

உடம்புள் இருக்கிறது உயிர். ஆனால் அவ்வுயிர் கட்புலனாகிறதில்லை. உயிரை உலகை நடாத்தும் கடவுள் இவற்றுள் இருக்கிறார். ஆனால், கட்புலனாவதிலர். எனவே, உயிரையும், உயிரின் உள்ளும் புறம்பும் உள்ள இறையையும் நம்மால் அறியமுடியவில்லை என்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய உண்மை என்னலாம். இந்த அறியாமை நீங்க வேண்டும். இவ்வித நீக்கம் பொன்னால் அடைவதன்று; அதிகாரத்தால் அடையப்படுவதும் அன்று. அன்பால், அருளால் அடையப்படுவது. அன்பால் அருளை அடைந்து, அருளால் தன்னையும் தலைவனையும் அறியப்பெறுவதே முறைமை.

அன்பின் உண்மையையும், அதனை இடமறிந்து செலுத்தும் முறைமையினையும், அதனால் அருள்பெறுதலையும், அந்த அருளால் ஆனந்தமுறுதலையும், நம் சிற்றறிவுகொண்டு தேர்ந்தறிதல் அரிது. விழிகளின் படலம் உரித்துப் பார்வை எய்தவைக்கும் மருத்துவன் போன்று, ஆன்ம அறிவின் பாச இருள், பசு இருள் நீக்கிப் பதியறிவை விளங்கச்செய்பவர் சற்குரு ஆவர். இந்தச் சற்குரு சிவமேயாகவும், சிவத்தினருள் நிரம்பியவராகவும் இருப்பவர். ஆதலின், நாம் ஆசாரியரை ஆண்டவராகவே மதித்துத் துதித்து வழிபாடாற்றக் கடமைப்பட்டுள்ளோம்.

ஆண்டவனிடம் குறைவற நிறைந்திருப்பது அருள். இதனை அருட்சத்தி என்பர். இந்த அருள், நம்பால் வருவதற்கு வழியாயிருப்பவரே ஆசாரியர். ஏரிநீர், பாய்காலின் வழியாகவே வயலுள் புகுந்து பரவும். ஆண்டவன் திருவருளும், ஆசாரியன் மூலமாகவே நம்பால் பதிந்து இன்பம் செய்யும். இந்த நேரிய முறையினை நமக்குச் சாத்திர நூல்கள் தெரிவிக்கின்றன. இந்தத் தெரிவினைத் தெளியச்செய்து அனுபவமாக்குபவரே ஆசாரியர்.

சாத்திரங்களும் ஆசாரியரும் ஒரே இடத்தில் கிடைக்கப்பெற்றால் நல்லது. இவ்வாறான நன்மை கொண்ட இடங்களே சந்நிதானங்களை அகத்தே கொண்ட திருமடங்கள். தென்னகத்தே திலகமெனத் திகழ்வது திருவாவடுதுறை ஆதீனம். மெய்கண்ட பனுவல்களும் சதாசாரியத்துவமும் விளக்கமுற வழிவழியாக உள்ள ஞானபீடத்தலம் இதுவாம். ஆதலின் இத்தகைய விழுப்பங்கொண்ட ஞானபீடத்தைப் போற்றுதலும், அப்பீடத்தால் போற்றப்படுதலும் வேண்டத்தக்கவை ஆகும்.

நம்மை நல்வழிப்படுத்தி ஞானநெறியிற்செலுத்துவ தற்கு அடிப்படைஅமைப்பன சிவஞானபோதமுதலான பதினன்கு நூல்களும், அவ்வழி விளக்கும் பதினன்கு பண்டார சாத்திரங்களும் ஆகும். இவ்விருபத்தெட்டு நூல்களும் திருவாவடுதுறை ஆதீனத்தைப் பண்ணை யாகக்கொண்டவை. இதனைச்சார்ந்து சொல்லேருழவர் களாயவர்கள் பலர்; சுகாநுபூதிமான்களாயவரும் பற் பலர். சிவஞானப்பேறு இப்பண்ணையின் விளைவாகும்.

தற்போது இந்த ஞானப்பண்ணையின் தலைவராக விளங்குபவர்கள் 21-வது குருமகாசந்நிதானமாகத் திகழும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆவர். இவர்கள், உலகமக்கள் உய்ய வேண்டி அருள் நோக்கம் பாலித்து மேற்குறிக்கப் பட்ட ஞானப் பனுவல்களையும் அவற்றின் சார்பான விளக்கங்களையும் வெளியீடுசெய்து இலவசமாக மக்க ளுக்கு வழங்கிவருகிறார்கள். பெற்றுப் பயனடைதல் மக்களாவார் கடமையாகும். எவ்வறம் பயில்வோரும் இத்தகைய சாத்திரங்களை நன்கு கற்றுத்தெளிதல் இன் றியமையாததாகும். "பன்னும் பனுவற் பயன்தேர் அறிவிலார், மன்னும் அறங்கள் வலியில" என்பது நன்னெறி நவிலும் வாசகம் ஆகும். நூல்களைமட்டு மன்றி, அவற்றின் சம்பிரதாய உரைகளையும், அவ் வுரைகளை உள்ளீடாகக்கொண்ட விளக்கக் கட்டுரை களையும் இன்னோன்ன பற்பல துணைநூல்களையும் ஆதீனம் வெளியிட்டு உதவிவருதல் உலகறிந்த ஒன் ரும். இவ்வாருன வெளியீடுகள், சித்தாந்த சைவ நெறியினை அறிதர நயப்போர்க்கு நல்ல முறையில் உதவிவருகின்றன என்றல் மிகையன்று.

விழுமிய இவ்வகைச் சித்தாந்த ஞானமும் அனுப வமும் அகிலம் முழுதும் பரவவேண்டும் என்பது

ஸ்ரீ - ல - ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுள்ள மாகும். "வேண்டத்தக்கது முழுதும் அறிவுறுத்து வதும், வேண்டும் நெறியில் பணிகொள்ளுவதும்" ஆதீனங்களின் அருளிச்செயல் ஆகும். இங்ஙனம் பணிகொள்ளும் தகைமையில், அடியேன் சித்தாந்த சாத்திரங்கட்கு விரிவுரை வரையும் வகையில் ஆட் கொள்ளப்பட்டனன். சாத்திரக் கேள்வியும், சிந்தனை யும் தெளிவும் ஒருதுளியளவும் இல்லாத அடியேன், ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளின் திருவருளாலும், ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் ஆசீர்வாத நோக்காலும் இவ்வகைப் பணியில் புகுந்து, திருவுந்தியார் முதல் சிவப்பிரகாசம் முதற்பகுதி அளவும் - பன்னிரண்டு சாத்திரப் பனுவல்கட்குக் கட்டுரை நூல்கள் வரைத லானேன். அவை அவ்வப்போது ஆதீன வெளியீடு களாக வழங்கப்பட்டுள்ளன. இதனால் சாத்திரஞானம் ஓரளவு கைவரப்பெறும்பாக்கியம் வாய்க்கப்பெற்றேன். இத்தகைத் திருவருளுக்கு - பேற்றிற்கு - "யாது நீ பெற்றதொன்றென்பால்" என்று நினைந்து நினைந்து நெஞ்சு உருகுவதல்லது என்னே கைம்மாறு இயற்ற வல்லேன்! மேற்கூறப்பட்ட திருவருள் உறைப்புத் துணைகொண்டே இதுபோழ்து சிவப்பிரகாச நூலின் உண்மை அதிகாரப்பகுதிக்கு உரிய சீர்மைக்கட்டுரை வரைதலுறுகிறேன். ஸ்ரீ ஆனந்த நடராசப்பெருமான் திருவடி - சிவஞானம் - உதவியாற்றுவதாகுக!

சிவப்பிரகாச நூலைப்பற்றியும், அதனின் உண்மை அதிகாரத்தின் செய்தி பற்றியும் இந்நன்றியுரையினை அடுத்துவரும் முகவுரைப்பகுதியில் ஓரளவு உரைக்கப் படும். இச்சீர்மைக்கட்டுரையினை அங்கீகரித்து, அனை வர்க்கும் அச்சிட்டு வழங்கும் பேருபகாரம் குறித்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளை நன்றிநலங்கனிந்து போற்றுகின்றேன்.

மற்றும் இந்நூல் உருப்படுதற்கு உள்ளங்கனிந்து பல்வகை நல்வகையாலும் துணைபுரியும் அன்பர்கள் அனைவர்க்கும் எனது வணக்கம் உரித்தாகுக !

இந்நூலைப் படித்திடும் ஆன்றோர்கள் ஆங்காங்குச் சோர்வினால் புகுந்துள்ள பிழைபாடுகளைப் பொறுமையால் களைந்து நலப்படுத்திக்கொள்ளுமாறு பணிவன்புடன் வேண்டிக்கொள்ளுகிறேன். சித்தாந்த சைவப் பொதுநல ஒளியிலே உலகம் நிலவுவதாக !

இங்ஙனம்,

கட்டுரை ஆசிரியன்,

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்,

**தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.**

21-G, துக்காராம்தெரு,
கடலூர் N. T.

## ஸ்ரீ உமாபதிதேவநாயனூர் துதி

அடியார்க் கெளியன் எனத்தில்லை
யண்ணல் அருளுந் திருமுகத்தின்
படியே பெற்ருன் சாம்பாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலுங் கரைவுற் றடைந்திடுவான்
உயர்தீக் கையினை அருள்நோக்காற்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல்போற்றி.

# நூன்முகம்

*" பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்*
*இறைவனடி சேரா தார். "*

—திருவள்ளுவர்.

பிறவிப் பெருங்கடல் நீந்திக் கரைசேர்வதே மக்கட் பிறப்பின் குறிக்கோள். இதற்கு, இறைவனடிசேர்தல் வேண்டும் எனச் சமயப் பொதுநூலும் நீதிநூலும் ஆகிய திருக்குறள் தெளிவாய்க் கூறுகிறது. உலகில் வாழும் ஆத்திகர் நாத்திகர் ஆகிய இருபாலார்க்கும் இந்நீதியுரை பொருந்தும். இறைவன் என்னும்சொல், உள்ளும் புறம்புமாகிய எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் செம்பொருளைக் குறிப்பதாகும். நம்மால், இங்ஙனம் எங்கும் நிறைந்திருத்தல் இயலாது. ஆகவே இறைவன் என்னும் பெயர்க்கு நாம் ஒருபோதும் உரியரல்லோம் என்பது வெள்ளிடைமலை.

இறைவன் என்னும் பெயர்க்குரிய தன்மைவாய்ந்த பொருள் இரண்டாக இருத்தல் இயல்வதன்று. அப்படி இரண்டாக இருப்பின் ஒன்றுக்குள் ஒன்று நிறைதல் பற்றிய மலைவு தலைப்படும். அவ்விருபொருள்களுக்குள் பகைமை ஏற்படுமாயின் நாம் ஈடேறுதல் எவ்வாறியலும்? இதனாலேயே, பிரமப்பொருள் ஒன்றே; ஒன்றே தான் என்றும், இரண்டல்ல என்றும் அறுதியிட்டுரைக்கின்றது திருமறை. "ஒன்றவன் தானே" என்பது திருமந்திரம். 'இறைவன்' என ஒருமைச் சொல்லிட்டு வள்ளுவர் உரைத்திருப்பதும் இக்கருத்தை வலியுறுத்தும். அத்தகைய ஏகப்பொருளை அடையவேண்டிய உயிர்கள் (மக்கள்) பலராவர். இதனால் ஆன்மாக்கள்

பல என்றேற்படுகிறது. "சேராதார்" எனப் பலர்பாற் சொல்லால் வள்ளுவர் குறிப்பதைக்கொண்டும் இந்த உண்மை தெரியப்படும்.

ஏகப்பொருளாகிய பிரமத்தை அநேகப் பொருளாகிய ஆன்மாக்கள் அடைந்து கலந்திடல்வேண்டும். அங்ஙனம், ஒன்ருகவும் ஆகாமல், இரண்டாகவும் இல்லாமல் அவ்விதம் அல்லாததும் ஆகாமல் சுத்த அத்துவிதமாகக் கலத்தற்பொருட்டே படைப்பு முதலான ஐந்தொழில்கள் இயல்பாக நிகழ்கின்றன. இங்ஙனம் கலத்தல் இல்லையேல், படைத்தலாதித் தொழில்கள் நிகழ்தல் வேண்டுவதில்லையாம். படைத்தலாதித் தொழில்கள் நிகழ்தலை நாம் கண்ணுரக் காண்கின்ருேம். இந்தத் தொழில்களால் ஆன்மாக்களுக்கு அவை அத்துவிதப் படுதற்கேற்ற தகுதியுண்டாகின்றது. இந்தத் தகுதி யாவது மெய்ஞ்ஞானமாம். இதனைப் பதிஞானம் எனவும் கூறுவர். இந்தப் பதிஞானம், இறையருளால் ஏற்படுவதாதலின் இதனை 'இறைவன் அடி' எனவும் கூறுவர். ஆகவே 'அடி' எனப்படுவது திருவருள் அல்லது ஞானம் ஆகும் எனப்படும். இத்தகைய திருவருள் அல்லது மெய்யறிவு ஆன்மவருக்கத்தவராகிய நமக்கு உண்டாவதற்கு நாம் 'இறைவன் பொருள் சேர் புகழை' விரும்பி அறிதல்வேண்டும். இதனை அறிதற்குரிய சிறந்ததுணையாக இருப்பதே சாத்திரம். ஆதலால், சாத்திரத்தை நாம் கற்றல்வேண்டியுள்ளது.

கொள்கை வேறுபாடு - பழக்க மாறுபாடு - இன வேற்றுமை - மொழிவகைகள் - நிறப்பிரிவுகள் - நிலப் பிரிவுகள் முதலான யாவகைப் பன்மைகளையும் கடந்த பொதுமுறையினை எடுத்துரைப்பதே சாத்திரமாகும். சாத்திரங்கள் பலவாக உள. எனினும், வேற்றுமைகள் யாவற்றையும் கடந்து சொல்வதும் செல்வதும் செய்வது சித்தாந்த சைவசாத்திரமாகும் என்னலாம்

'சைவம்' என்னும் சொற்பொருள் மிகப் பரந்த தன்மையை உடையது. இப்பரந்த பொருளை நம் யாவர்க்கும் அறிவிக்கும் சாத்திரத்தை மெய்கண்ட சாத்திரம் என்பர். பிணக்கின்றியும், மயக்கமின்றியும், ஐயமின்றியும், உண்மையை யாவர்க்கும் ஒரேவிதத்தில் துணிந்துரைக்கும் இயல்பினது மெய்கண்டசாத்திரம். பதியுண்மையை - பசுவுண்மையை - பாசவுண்மையை மலைவற அறிவுறுத்தும் துணிவு மெய்கண்டசாத்திரம், நூற்றுக்குநூறு பெற்று விளங்குவது. இவ்வாறான துணிவு பூரணமாக நமக்கு ஏற்படவேண்டுமானால் மெய்கண்டசாத்திரம் என்னும் பெயர்பூண்டவையான பதினான்கு நூல்களை நல்லமுறையில் கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிதல்வேண்டும். இதன் பயனாகவே உண்மைநிட்டை கைகூடும். இந்த நிலையிலேதான் பேருண்மை புலனும். இதுவே பிறவிக்கடல் கடத்தற்கு உரிய சீரிய நெறியாம்.

இனி மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கின் பெயர்களையும் அறிந்துகொள்வோம். அவை 1. திருவுந்தியார், 2. திருக்களிற்றுப்படியார், 3. சிவஞானபோதம், 4. சிவஞானசித்தியார், 5. இருபா இருபது, 6. உண்மைவிளக்கம், 7. சிவப்பிரகாசம், 8. திருவருட்பயன், 9. வினாவெண்பா, 10. போற்றிப்பஃறொடை, 11. கொடிக்கவி, 12. நெஞ்சுவிடுதூது, 13. உண்மை நெறிவிளக்கம், 14. சங்கற்ப நிராகரணம் என்பன.

இந்தப் பதினான்கும் சித்தாந்த சைவசாத்திரங்கள் எனப்படும். வேதாந்தத்தெளிவை இவை எடுத்துரைப்பனவாகும். வேதாந்தத்தெளிவு எனினும் சித்தாந்தம் எனினும் ஒன்றே. சித்தாந்தமும் வேதாந்தமும் ஒன்றோடொன்று மலைவுடையன என எண்ணுதல் தக்கதன்று. இந்தச் சித்தாந்த சாத்திரநூல்களை வரன்

முறையாக அறியப்பெறின் சீவபோதம் தேய்தலுறும். அங்ஙனம் சீவபோதம் தேய்வடைகையில் இடையே அனுபவ முறைகளில் மயக்கம் தோன்றலுறக்கூடும். இந்த மயக்கங்களை மாய்ப்பன பண்டாரசாத்திரங்கள் பதினான்குமாம்.

பண்டாரசாத்திரங்கள், பரிபாகமுற்ற சீடர்கட்கு விளையத்தக்க ஐயப்பாடுகளை அனுபவம் உரைத்துத் தெளிவிப்பனவாகும். இந்தச் சாத்திரங்கள், சிவானுபூதிமான்களால் சிவாநுபவநிலையிலிருந்து அருளிச் செய்யப்பட்டவை ஆகும். ஆதலால், சாத்திரங்களை நிகர்க்கும்பெருமை உடையனவாகும் இவை. பொதுப் படக்கூறின், நம் அறிவை நல்நெறிப்படுத்தி, அதனால் விளையும் அனுபவத்தை அடைவிப்பனவே மெய்கண்ட சாத்திரங்களும், பண்டாரசாத்திரங்களும் எனலாம்.

இனிப் பண்டாரசாத்திரங்கள் பதினான்கின் பெயர் களையும் ஈண்டுக் காண்டல் ஆகும். அவை 1. அம் பலவாணதேசிகர் தசகாரியம், 2. சன்மார்க்க சித்தியார், 3. சிவாச்சிரமத் தெளிவு, 4. சித்தாந்தப்பஃறொடை, 5. சித்தாந்த சிகாமணி, 6. உபாயநிட்டை வெண்பா, 7. நிட்டைவிளக்கம், 8. உபதேசவெண்பா, 9. அதிசயமாலை, 10. நமசிவாயமாலை என்றவை பத்தும்; 11. ஸ்ரீ தட்சிணாமூர்த்திதேசிகர் தசகாரியம், 12. உபதேசப்பஃறொடை என்ற இரண்டும்; 13. ஸ்ரீ சுவாமிநாததேசிகர் தசகாரியம் ஒன்றும்; 14. ஸ்ரீ பேரூர் வேலப்பதேசிகர் பஞ்சாக்கரப் பஃறொடை ஒன்றும் ஆகிய பதினான்கும் ஆகும்.

இங்குக் கூறப்பட்டவற்றால், சித்தாந்த சைவநெறியானது 14+14=இருபத்தெட்டு நூல்களால் கூறப் படுதல் தெரியலாம். சிறப்புள்ள சைவாகமங்கள் 28. அவை வடிவுகொண்டன இந்த இருபத்தெட்டும்

என்றல் தவறுகாது என்க. வடமொழி ஆகமங்கள் இருபத்தெட்டினையும் ஓதுவதாலாய பயனை இந்த இரு பத்தெட்டு நூல்களையும் ஓதுவதனுல் ஐயமின்றி எய்தக் கூடும். எவ்வாற்ருனும் நமக்கு வேண்டுவது ஞானம். அதனை இந்த இருபானெட்டுச் சாத்திரங்களையும் ஓதித் தெளிவதனுல் எளிதில் அடையப்பெற்று, எடுத்துள்ள இப்பிறப்பிலேயே பேரின்ப வாய்ப்புக்கு வழிகோலி விடுதல் ஒல்லும்.

இனி, மெய்கண்ட சாத்திரங்களை இயற்றியருளிய ஆசிரியர்களை நாம் அறிதல் நன்ரும். இவ்வாசிரியர் வரலாறுகளை அவ்வந்நூல்களின்முன் உள்ள வரலாறு களால் தெரியலாம். இங்குத் தொகுப்பாக ஆசிரியர் களின் திருப்பெயர்களை மட்டில் அறிதல் சாலும்.

திருவியலூர் உய்யவந்ததேவநாயனுர் அருளியது 1. திருவுந்தியார்; திருக்கடவூர் உய்யவந்ததேவநாய ஞர் அருளியது 2. திருக்களிற்றுப்படியார்; மெய்கண்ட தேவநாயனுர் அருளியது 3. சிவஞானபோதம்; அரு ணந்திதேவ நாயனுர் அருளியன 4. சிவஞானசித்தி யார், 5. இருபா இருபஃது; மனவாசகங்கடந்த நாய ஞர் அருளியது 6. உண்மைவிளக்கம்; உமாபதிதேவ நாயனுர் அருளியன 7. சிவப்பிரகாசம்; 8. திருவருட் பயன், 9. வினுவெண்பா, 10. போற்றிப்பஃறெடை, 11. கொடிக்கவி, 12. உண்மைநெறி விளக்கம், 13. நெஞ்சுவிடுதூது, 14. சங்கற்பநிராகரணம்.

மேலே தரப்பட்ட பட்டியலினின்றும் நாம் மெய் கண்ட சாத்திரங்கள் பதினுன்கையும் அவற்றின் ஆசிரி யர்கள் பெயருடன் அறியலாம். இந்தப் பதினுன்கு நூல்களில் எட்டு நூல்கள் ஸ்ரீ உமாபதிதேவ நாயனு ரால் இயற்றப்பட்டுள்ளன. அவை, சிவப்பிரகாசம் முதல் சங்கற்பநிராகரணம் வரையான எட்டும் ஆம்.

இந்த எட்டு நூல்களுக்கும் தொகுப்பாய்ச் 'சித்தாந்த அஷ்டகம்' என்றும் பெயர் உண்டு. இந்த எட்டு நூல்களையும் முறை தெரிந்து அறிந்துகொண்டாலும் சித்தாந்த சைவசமயக் கொள்கைகளை நன்கு அறியலாகும். பொதுவாக நோக்கின், சிவஞானபோதம் - சிவஞான சித்தியார் - சிவப்பிரகாசம் என்கிற மூன்று சாத்திரங்களையும் படிப்படியாகக் கற்பது சிறந்தமுறை ஆகும்.

சிவப்பிரகாசம் சார்புநூலாதலின் முதலில் அதனை நன்கு கற்றறிந்தபிறகு, சிவஞானசித்தியாரைக் கற்றறிதல்வேண்டும். அப்பால் சிவஞானபோதத்தை அமைதியாக ஓதியறிந்திடல் உகந்தமுறை ஆகும். இந்த வழியில் கற்பதால் சித்தாந்தக் கொள்கையைத் தெளிவுற அறியக்கூடும். அதன்பின் ஏனைய பதினொரு சாத்திர நூல்களையும் முறையாக அறிதல் நன்றாகும்.

சாத்திர நூல்களைக் கற்போர் எவரும் அவற்றை நன்கு அறிந்த பெரியோர்கள் - அறிஞர்கள் - முனிவர்களிடம் பாடம் கேட்டறிதல் தக்கது. தாமே கற்பதால், விளங்கப்பெருமை - நுணுக்கம் தெரியாமை, விபரீத உணர்ச்சிமுதலான குறைபாடுகள் உண்டாகி உண்மை அறிவைக் குலைத்திட நேரிடும். இவ்வகையில் சாத்திரக் கல்வியறிவும் கேள்வியறிவும் பெற்றபின்னர்ச் சமய முதலான தீக்கைகளையும் அனுபவ உபதேசங்களையும், பஞ்சாக்கரத்தை ஓதுமுறையையும், நிற்குமுறையையும் சற்குரு காட்டும் நெறியில் தெரிந்து சிந்தித்தும், தெளிந்தும், நிட்டைகூடியும் ஒழுகுதலே உண்மையாகப் பேரின்பமுறுதற்கும் இம்மையில் உண்மைச் சீவன்முத்தராகி வாழ்தற்கும் சாலச்சிறந்த வழியாகும். சதாசாரியருடைய திருவருளிலும், திருவருட்சத்தியின் கருணையிலும், சிவத்தின் பேரருளிலும் இம்மை முதலே திளைத்து இன்புறுதற்கு முறையான சிறந்த படிமுறைகளாகப் பெரியோர்களாலும், வேதசாத்திரங்களாலும்,

புராண இதிகாசங்களாலும் வகுக்கப்பட்டுள்ள நெறிகள் இவை. இவற்றைக் கடைப்பிடிக்கமாட்டாமை நம் அறியாமை ஆகும். இவ்வறியாமையைப் போக்குதற்கண், உலகாயத விஞ்ஞான நூல்களும் சாமானியர் நூல்களும் பயன்பட மாட்டா. இறையருள் பெற்ற மெய்ஞ்ஞானியர் இயற்றி அளித்துள்ள சாத்திரநூல்களே பயன்படுவன.

இம்முகவுரைக்குரிய சாத்திரநூல் சிவப்பிரகாசம் என்பது முன்னரே கிளத்தப்பட்டது. இதனை நம்மனோர்க்கு உதவிய பெரியார், ஸ்ரீ உமாபதிதேவ நாயனார் ஆவர். இவரது வரலாற்றினை இவ்வாதீனத்து 65 அல்லது 214 ஆவது வெளியீடுகளால் அறியலாகும். ஸ்ரீ உமாபதிதேவ நாயனார் என்பவர், புறச்சந்தான குரவர் நால்வரில் ஒருவர் ஆவர். முள்ளிச் செடிக்குக்கூட முத்திகொடுத்த தெய்வத்தன்மை வாய்ந்தவர் இவர் ஆதலால், இவரது நூல்களைக் கற்பதனால் முத்திவிளையும் என்பதில் ஐயம் நொய்யளவுமில்லை.

சித்தாந்த அஷ்டகம் எனப்படும் சாத்திரநூல்கள் எட்டினை இயற்றியருளிய இவ்வாசிரியர், வேறு சிறந்த நூல்கள் சிலவும் செய்துள்ளார். அவை கோயிற் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறை கண்டபுராணம், சேக்கிழார் புராணம், திருப்பதிக் கோவை, திருப்பதிகக்கோவை, வடமொழியில் பௌஷ்கராகமவிருத்தி முதலனவாகும். இவைகளை ஓதுவதனாலும் சித்தாந்த சைவமுறைகளை அறியலாகும்.

இந்தச் சிவப்பிரகாசநூல், முன்னையவற்றின் சார்பு நூலாகச் சமைக்கப்பட்டதாகும். "இருவர் நூற்கும் ஒரு சிறை தொடங்கித் திரிபு வேறுடையது புடைநூலாகும்" என்பது சார்புநூலின் இயல்பு உணர்த்தும் இலக்கணமாம். இந்நூலாசிரியர், இந்நூலினைச் சிவ

ஞானபோதத்தையும் - சிவஞானசித்தியாரையும் தமது குருவின் திருவருளால் அறிந்துகொண்டு, தாமும் நன்கு ஆராய்ந்தும் சிந்தித்தும் தெளிந்தும், தெய்வத் திருவருள் விளக்கியருளச் சிவாகமங்களுக்கு உகந்த முறையில் ஆக்கியுள்ளார். இதனை இந்நூலின் நூல் மரபுரைக்கும் பகுதியால் நாம் தெரிதல்கூடும்.

இந்நூல் நூறு திருவிருத்தங்களைக்கொண்டது. போதத்தாலும் சித்தியாலும் ஏற்படும் சிவஞானத்தால் சிவம் இங்ஙனம் பிரகாசிக்கும் என்பதை இந்தத் திரு விருத்தங்கள் தெளிவிக்கின்றன. இந்த நூறு திரு விருத்தங்களும் ஐம்பது ஐம்பதுகொண்ட பொதுவும் உண்மையுமான இரண்டு பிரிவுகளாக வகுக்கப்பட்டுள்ளன. முப்பொருள் இலக்கணத்தைப் பொதுப் பிரிவு புகலும். ஆன்ம இலக்கணம் முதலாக ஒன்பது பொருள்களை உண்மைப்பிரிவு உரைக்கிறது. மற்றும், பொதுப்பிரிவு ஓரதிகாரத்தாலும், உண்மைப் பிரிவு ஒன்பது அதிகாரத்தாலும் ஆகப் பத்து அதிகாரங்களால் இந்நூல் சிவம் பிரகாசித்தலை உணர்த்தும் பெருமைவாய்ந்துள்ளது.

இந்நூலின் முதற்செய்யுள் விநாயகப்பெருமானைத் துதிப்பதாக உள்ளது. இதனை அடுத்துநிற்கும் பன்னிரண்டு செய்யுட்கள் மங்கல வாழ்த்துப்பகுதி எனப் படுவதாகும். இதற்கான விரிவுக்கட்டுரை இவ்வாதீனத்து 143-ஆம் வெளியீடாக வழங்கப்பட்டது.

பொது அதிகாரம் 38 திருவிருத்தங்களை உடையது. அவற்றுள் ஆறு திருவிருத்தங்கள், சிவஞான போதம் – சித்தியார்களின் முதற்சூத்திரக் கருத்துக்களைத் தழுவியவை ஆகும். அடுத்த முப்பத்திரண்டு திருவிருத்தங்கள் இரண்டாம் சூத்திரக் கருத்துக்களை வித்தரிப்பனவாகும். இவ்வளவும் பொது அதிகாரம் புகலுவதாம்.

இனி, உண்மை அதிகாரம் 50 திருவிருத்தங்களைக் கொண்டது. மூன்றும் சூத்திரம் முதல் பன்னிரண்டாம் சூத்திரம்வரை உள்ள பத்துச் சூத்திரச் செய்திகளை இவை கூறுவன ஆகும். உண்மை அதிகாரத்துத் திரு விருத்தங்கள் ஐம்பதினுக்கும் சூத்திரப்படி அடைவு இங்கே தரப்படுதல் காணலாம்.

மூன்றும் சூத்திரச் செய்திகளை எட்டுத் திருவிருத் தங்கள் இயம்புகின்றன. இவ்விருத்தங்கள் பெரும்பான் மையும் ஆன்மாவைப்பற்றிய கருத்துக்களைக் கழறுவன வாகும் என்னலாம்.

இனி, நான்காம் சூத்திரச் செய்திகளான அவத்தை கள்பற்றி மூன்று திருவிருத்தங்கள் பேசுகின்றன.

ஐந்தாம் சூத்திரம் கூறும் 'அறிவிக்க அறிதல்' பற்றி ஐந்து திருவிருத்தங்கள் அறைவனவாம்.

ஆறும் சூத்திரத்தின் ஞானமறியுமுறைமையை 68 என்னும் எண்ணுள்ள ஒரே திருவிருத்தம் ஓதுகிறது.

ஏழாம் சூத்திரம் சூசிப்பிக்கும் ஆசாரியனுதவியை இரண்டு திருவிருத்தங்கள் எடுத்துரைக்கின்றன.

எட்டாம் சூத்திரச் செய்தியாகிய திருவருள்துணை, ஐந்து திருவிருத்தங்களால் அறிவுறுத்தப்படுகின்றது.

ஒன்பதாம் சூத்திரக் கருத்தான ஆன்ம சுத்தி பற்றிய செய்திகள் நான்குதிருவிருத்தங்களால் நவிலப் படுகின்றன.

பத்தாம் சூத்திரச் செய்திகளை - ஆன்மா சிவத்தை அடைந்து அனுபவிக்கும்முறைமைகளை - பதின்மூன்று திருவிருத்தங்கள் பகருகின்றன.

பதினொன்றும் சூத்திரச் செய்தியாகிய சீவன் முத்தரியல்புகள், ஐந்து திருவிருத்தங்களால் கூறப் படுகின்றன.

பன்னிரண்டாம் சூத்திரச் செய்தியாகிய ஞானத் துச் சரியைப்பொருள், மூன்று திருவிருத்தங்களால் மொழியப்படுகின்றது.

இப்படியாக உண்மையதிகாரமானது சிவஞான போதத்தின் மூன்றும் சூத்திரம் முதலாகப் பன்னிரண் டாம் சூத்திரம் இறுதியாக உள்ள செய்திகளையெல் லாம் செப்புகின்றது என்னலாம். ஆதலினால்தான், இவ்விருத்தப் பொருள்களையும், சித்தியார்ப் பொருள் களையும் ஓதியறிந்த பிறகு சிவஞானபோதசாத்திரம் பயிலத்தக்கதாகும் என்னலாம்.

இந்தச் சிவப்பிரகாசம் எனப்படும் சாத்திரத்துக்கு இவ்வாதீனத்து மகாசந்நிதானம் ஸ்ரீவேலப்பபண்டார மும், அவர்களுடைய மாணவர் ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரானும் உரை வகுத்திருந்தனரெனக் கூறுகின்ற னர். ஆனால் இன்னமும் கைக்கு எட்டவில்லை என்பர்.

மதுரைச் சிவப்பிரகாசர் என்பவர், இச்சாத்திர நூலுக்கு மிகவும் விரிவான உரை வகுத்துள்ளார். அவ்வுரையில் செய்யுள்தோறும் காவை - அம்பல வாணத்தம்பிரானார் இந்நூற் கருத்தாகச் செய்துள்ள குறள்வெண்பா ஒரு நூற்றினை ஒவ்வொரு குறளாகத் தரப்பட்டிருத்தல் காணலாம். மற்றும், இந்நூலுக்குச் சிறப்புடையோர்களாகிய பலர், தம்பிரான்மார்களும் பொழிப்புரை வரைந்தளித்துள்ளனர் என்பர். ஆனால் மதுரைச் சிவப்பிரகாசர் இயற்றியருளிய உரையானது விரிவு, நுட்பம், அகலம்கொண்ட பேருரை ஆகும். இவ்வுரை ஏறக்குறைய 477 ஆண்டுகட்கு முன்னர்

இயற்றப்பட்டதென்ப. இந்த உரை இவ்வாதீனத்தின் 212, 214 எண்களுள்ள வெளியீடுகளாக 1966ல் இரண்டு பிரிவுடையதாக வெளியிடப்பட்டவை ஆகும்.

மற்றும், இந்தச் சிவப்பிரகாசநூலுக்கு இலக்கணம் ஸ்ரீ சிதம்பரநாத முனிவர் என்பாரும் ஓர் உரை இயற்றியுள்ளனர். இந்த உரை 1953ல் இவ்வாதீனத்தின் 65ஆவது வெளியீடாக முன்னரே வழங்கப்பட்டுள்ளது. இந்த உரை கி. பி. 1772க்கு முந்தியது எனப்படுகின்றது. மதுரைச் சிவப்பிரகாசர் உரையிலே உள்ள சிற்சில இடங்களை இவ்வுரை சீர்திருத்தம் செய்து கூறுகின்றதாகும் என்ப. இந்த ஸ்ரீ சிதம்பரநாத முனிவர், இந்த ஆதீனத்துத் திராவிடமாபாடிய கருத்தராய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளின் பன்னிரு மாணவர்களுள் ஒருவராவர். திருப்பாதிரிப்புலியூர்ப் புராணமும் இவர் இயற்றியதாகும்.

இங்ஙனம் இச்சிவப்பிரகாச நூலானது, பற்பல பெரியோர்களால் உரை வகுக்கப்பட்டுள்ளமையால் மிகவும் சிறந்ததென்பது தெரியலாம். இவ்வுரைகள் எல்லாம் இருக்கவும், இவ்வாதீனத்துத் தற்போது எழுந்தருளியுள்ள 21-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகபரமாசாரிய சுவாமிகள் எளியேனை இந்நூலின்கண்ணும், உரைகளின் பக்கலும் ஈடுபடுத்தும் திருவுள்ளந்தாங்கி இந்நூலுக்கு எளிய விரிவுக்கட்டுரை எழுதுமாறு திருவருளாணை பிறப்பித்தமையால், 'சிவப்பிரகாசம் - சீர்மைக்கட்டுரை' என்னும் பெயரால் இதுகாறும் பொதுஅதிகாரத்துக்கு மூன்று பகுதிகளாக விரிவுரை எழுதி வெளியிடப்பட்டது. இப்போது அத்திருவருளாணையின் வழியே நின்று உண்மையதிகாரத்தில் மூன்றும் சூத்திரப்பகுதிக்கு விரிவுரை காணப்படுகின்றது.

இங்ஙனம், சமயஞானம் சற்றும் அற்ற அடியேனைச் சித்தாந்தப் பெருந்தேக்கத்திலே பிறவிவெப்பம் தீரு மாறு மூழ்கித் திளைக்கச்செய்யும் திருவருளை இதயத்தே கொண்டு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுடைய திருவடிமலர்களைச் சிரத்தே வகித்து வணங்குகிறேன். வாழ்க வையகம்!

**கட்டுரையாசிரியன்.**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவப்பிரகாசம் - சீர்மைக்கட்டுரை

## உண்மையதிகாரம் - மூன்றும் சூத்திரம்

## ஆன்ம இலக்கணம்

### 1. உண்மையதிகாரத்தின் இயல்முறைமை

*இங்(கு) இவை பொது இயம்பும்*
*என்பர்கள்; இதன்மேல் ஆன்மாத்,*
*தங்கிய அஞ்ச வத்தை,*
*தன்உண்மை உணர்த்தும் தன்மை,*
*பொங்(கு)ஒளி ஞான வாய்மை,*
*அதன்பயன், புனிதன் நாமம்,*
*அங்(கு)அதின் அணைந்தோர் தன்மை*
*அறைகுவன் அருளி னுலே.*

### பொழிப்புரை

இதன்முன் பொது அதிகாரத்திலே சொல்லிப் போந்த ஐம்பது செய்யுட்களும் - முப்பொருள்களின் இலக்கணத்தைப் பொதுவாகப் பொழிப்பும் அகலமுமாகச் சொல்லுவதனுலே பொது என்று சொல்லப் படும் என்பர் அறிவுடையோர்; இதற்கு மேலான உண்மை என்று வகுக்கப்படும் ஐம்பதிலும் - ஆன்ம இலக்கணம், பொருந்தப்பட்ட ஐந்து அவத்தைகள்,

*சிவன் உள்ளேநின்று கருவிகளைக்கூட்டி ஆன்மாவினுடைய உண்மை உணர்த்தும் முறைமை, (உண்மை =சிற்சத்தி) ஒளிநிறைந்த சிவனுடைய ஞானத்தின் உண்மை, அந்தச் சிவஞானத்தால் உண்டாகிய ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி ஆன்ம இலாபம் என்கிற மூன்றுவகையான பயன், நின்மலனுடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தருள்நிலை, அந்த உண்மையிலே அணைந்தோருடைய இயல்பு ஆகிய இந்த ஏழுவகைகளையும் சிவானுக்கிரகத்தாலே சொல்லுவேன்.*

*முப்பொருள்களின் நுட்பமும், சம்பிரதாயக்கிரமமும் சொல்லப்படுதலால் இப்பகுதி உண்மையதிகாரமெனப்படும். பயன் மூவகையாகலின் இரண்டினைக் கூட்டித் தொகை ஒன்பது என்பர் சிலர்.*

### தொடக்கவுரையும் விளக்கவுரையும்

உலகில் வளம்பட வேண்டாதார் யாரும் இலர். அவரவரும் தத்தம் அறிவுத் தரத்திற்குத் தக்கவாறு தமக்கு வேண்டும் வளம் இன்னது எனத்தேர்ந்து அதற்கேற்பவாழ்க்கையை வகுத்துக்கொள்கின்றனர். மானிடசமுதாயமாகிய ஓரினத்தைச் சேர்ந்தவர்களாகிய நாம் ஒரேவிதமான உன்னதமுள்ள வளத்தையே நாடி அடையவேண்டியவர்கள் ஆவோம். கட்புலனால் காணமுடியாத ஏதோ ஓர் உயர்ந்தபொருளின் படைப்பால் நாம் இவ்வுலகில் வந்துள்ளோம். நமது வரவின் மூலத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஞானிகள் பலர், இவ்வித மூலத்தை இன்னது என ஆராய்ந்து (பல்வகைக் கோணங்களிலும் ஆராய்ந்து) ஒரேமாதிரியான முடிபுக்கு வந்துள்ளனர். இந்தவிதமாகத்தேறப்பட்ட அம்முடிந்தபொருளையே ‘கடவுள்’

என யாவரும் கூறலாயினர். ஆகவே, இந்த ஒரே பொருளால் - அதன் துணையால் - இவ்வுலகினை இடமாகக்கொண்டுள்ள நாம் அனைவரும் உடன்பிறப்பாளர்கள் ஆகிறோம். ஆண் × பெண் என்கிற உடம்பு வேறுபாட்டால் அமையும் இந்த இரண்டு விதங்களையல்லாமல் வேறு எவ்வித வேறுபாடுகளையும் நாம் கருத வேண்டுவதில்லை. அவ்வாறின்றி, வேறுபாடு கருதுதல் நம்முடைய அறிவுத்தரத்தின் ஏற்றத்தாழ்வையே காட்டுவதாகும்.

இவ்வேற்றத்தாழ்வினால் மூலப்பொருள் எவ்வித மாறுபாடும் எய்தாது. வட்டம் எவ்வளவு பெரிதாயினும், சிறிதாயினும் அவ்வட்டத்தின் ஒருவிளிம்பிலிருந்து குறுக்காக நேரே எதிர்விளிம்பிற்குச் செல்பவன் எவனும் அவ்வட்டத்தின் மையத்தைக் கடந்தே திருவான். நேர்க்குறுக்காகச் செல்லாதவன் வட்டத்தின் உள் இருக்கும் எண்ணற்ற மையங்களின் மூலமாக அவ்வட்டத்தின் பிறிதொரு விளிம்பை அடைந்திடுவான். வட்டத்தின் சரியான மையம் எப்போதும் ஒன்றாகத்தான் இருக்கும்; பல ஆக இராது. இதரவிதமான மையங்கள் பலவாக இருப்பது இயல்பே. இவ்வித மையங்கட்கு அளவே இல்லை. எனவே, எவ்வித வட்டத்தின் மூலமும் ஒன்றே ஆகும். ஆதலின், சடமும் சித்துமாகிய எல்லாப்பொருள்களின் மூலமும் ஒன்றேயாக இருத்தல் உண்மையே. இந்த உண்மை மூலத்தை அறிவதற்கும் அடைவதற்குமே நாம் யாத்திரை செய்கிறோம்; செய்துகொண்டேயிருக்கிறோம்.

உண்மைமூலமெனப்படும் ஒன்றைக் கண்டறிந்தடைந்தபிறகு யாத்திரை நின்றுவிடும். உண்மைமூலம்

எனப்படும் இதனைநோக்கி நாம் செய்துகொண்டிருப்பது, 'தலயாத்திரை' போல்வது ஆகும். இந்த யாத்திரைக்காரர்கட்கெல்லாம் நோக்கம் ஒன்றே. நோக்கத்தாலும் முயற்சியாலும் ஒன்றுபட்டுள்ளவர்களாகிய நம்முள் வேறுபாடு இருத்தல் இயல்பாகாது. வேறுபாடு ஏற்பட்டால் நாம் யாத்திரைப்பாதையில் வழிதவறி உண்மைமூலமல்லாத பலப்பல மையங்களை அடைந்தடைந்து நிலைபெறாமல் சுழலுமாறு நேரிடும். இந்தச்சுழற்சிப்பாதை அழற்சிபயப்பதாகும். உண்மைமூலத்துக்குச் செல்லும் தலயாத்திரைப் பாதையில் ஆத்திகம் - நாத்திகம் - மதம் - இனம் - இடம் - நிறம் - மொழி - மௌனம் - இல்லறம் - துறவறம் - அதிகாரம்- அடிமை - கல்வி - கல்லாமை - அறிவு - அறிவின்மை முதலான எவ்விதத்தடையும் இல்லை. இங்ஙனம் இடரேதும் இல்லாத இவ்வினியபாதையில் நாம் யாவரும் தாயும் சேயும் போலவும், சகோதரன் சகோதரி போலவும் சென்றுசென்று ஒருவரையொருவர் ஒன்றுகூடிச்சந்தித்து உண்மைமூலத்தைக் கண்டு அமைதியுறல் வேண்டும். இதுபற்றிய ஆன்றோர் வாசகம் ஒன்றையும் ஈங்கே அறிதல்நன்றும். அவ்வாசகப்பகுதி வருமாறு :-

"We must meet......as pilgrims who set out to find god......Man must meet man, nation must meet nation as brothers and sisters as children of God"

இவ்வாசகத்தின் உண்மை மனித குலத்துக்கே பொதுமை வாய்ந்ததாகும். மதங்கள் என்னும் பெயருடையவை யாவும் இப்பொதுமைக்காகவே செயல்

ஆற்றிவருகின்றன். அன்றியும், இந்தப்பொதுமைக்குத் தெளிவான வழியினை அறிவுறுத்தற்பொருட்டு மதத் தாபனங்களையும், சமய நூல்களையும் எண்ணிலவாகத் தொன்றுதொட்டே ஆன்றோர்கள் அமைத்துள்ளனர்.

இத்தகைய தாபனங்களையும் நூல்களையும் நிறையக் கொண்டுள்ளது நம் பாரதநாட்டின் தென்னகம். இத் தாபனங்களும் நூல்களும் தென்னாட்டுக்கே சிறப்பு உடையவை எனினும், கூர்ந்துநோக்குவோர்க்கு உலகில் உள்ள எந்நாட்டுக்கும் இவை பொதுவானவை என்பது புலப்படும். இதுபற்றியே, ''தென்னாடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'' என அறிவு நிரம்பிய அண்ணலார் கூறி வைத்துள்ளார். இவ்வாசகத்தில் கடவுளைக் குறிக்கும் சொற்கள் இரண்டு உள. அவை, சிவன் என்பதும், இறைவன் என்பதுமாகும். இவை இரண்டும் பொருளால் ஒன்றே. ஆதலால், சிவன் என்னும் பெயரால் இறைவனை வழிபடுவோர் பொதுமையறத்தின் வேறுபட்டவர் அல்லர் என்பது தெளியப்படும். எனவே, சைவசமயமும், அந்தச் சமயத்து நூல்களும் அனைவர்க்கும் பொதுவாம் என்றல் பொய்யாகாது. உலகமக்கள் யாவருமே, இச்சமயத்துறை நூல்களை ஓதலாம்; பயன் பெறலாம்.

இம்முறையில் தென்னகத்தின் கண்ணெனத் திகழும் திருவாவடுதுறை ஆதீனம் படைத்துள்ள சமயச்சார்புடைய சாத்திர நூல்கள் யாவும் யாவராலும் கற்கத்தக்கன என்னலாம். இந்நூல்களை 'மெய்கண்ட சாத்திரம்' என வழங்குகின்றனர். இவற்றின் எண்ணிக்கை பதினான்கு. இவற்றின்ஒருபகுதியே 'சித்தாந்த

அட்டகம்' எனப்படும் நூல்கள். இவ்வெட்டுத் திறம் படைத்த நூல்களில் ஒன்றே 'சிவப்பிரகாசம்' எனும் பெயருடையது. எட்டுக்குணம் இயைந்தவன் சிவன்-இறைவன். மெய்கண்டசாத்திரத்தின் எட்டுத்திறங்களை எடுத்துக்காட்டுவன சித்தாந்த அட்டகம். நிறைந்த ஞானத்தைப் பயப்பது சிவத்தின் திருவடி. அவ்வாறே சித்தாந்த அட்டகத்தின் ஒன்றாகிய சிவப்பிரகாசம் சிவஞானத்தை அறிவிப்பதாகும். பாசநீக்கமும் சிவப்பேறுமான இரண்டாக இலகுவது சிவஞானம். அங்ஙனமே பொதுவும் உண்மையுமாகிய இரண்டு பகுதியதாக விளங்குவது சிவப்பிரகாசநூல். ஆகலின் இறைப்பொருளின் இருதிருவடிகளை நிகர்ப்பன இவ்விருபகுப்புக்களும் என்க.

இறை திருவடிகளைப் பற்றிக்கிடந்தே உயிர்கள் பிறப்பில்லாப் பெருவாழ்வும் பேரின்பமும் பெற்றுதல் வேண்டுமென்றல் ஒருதலை. அவ்வாறே பேரா இயற்கை நிலையினைப் பெற நயப்போர் யாவரே ஆயினும் அவர்கள், வேறுபாட்டுணர்வுகளை விட்டொழித்து நடுவு நிலையில் நின்று இந்தச் சிவப்பிரகாசநூலின் பொதுவும் உண்மையுமாகிய பகுதிப் பொருள்களைக் கற்றறிதல் வேண்டத்தக்கதாகும். இறை திருவடிகளைச் சார்ந்தே சாக்காடு அறப்பெறல் வேண்டும் என்பதை நீதிநூற் பேராசிரியராம் திருவள்ளுவரும் கடவுள் வாழ்த்து அதிகாரத்தே ஏழிடங்களில் எடுத்துரைத்தலினின்றும் எவரும் அறியலாகும். சிவப்பிரகாசம் எனப்படும் இந் நூலிலும் மங்கலவாழ்த்துப்பகுதியுள் நிட்கள சிவச் செயல் செப்பும் நடராஜர் துதியிலே 1. ஒளியாயிருத்தல், 2. ஞானமூர்த்தியாயிருத்தல், 3. உமை காண இருத்தல், 4. இதழிமுதலன சடையில்வைத்திருத்தல்,

5. பவம் நீக்கல், 6. இமையோர் துதிசெய்ய இருத்தல்; 7. மன்றுள் நிருத்தம்செய்தல் ஆகிய ஏழு செய்திகள் கூறித் தாள்களைப் போற்றல்செய்யவேண்டும் என்று உரைக்கப்பட்டிருத்தல் காணலாம்.

இனி, இந்நூலின் பொது அதிகாரச்செய்தியானது, சிவஞானபோத நூலின் முதல் இரண்டு சூத்திரப் பொருள்களைப் போதிக்கின்றது. இவ்விரு சூத்திரப் பொருள்களின் விளக்கக்கட்டுரை, இவ்வாதீனத்து 143, 153, 170 எண்களுள்ள வெளியீடுகளில் தரப்பட்டிருத்தல் காணலாம்.

பொது அதிகாரத்தினை அடுத்துள்ளது உண்மை அதிகாரப்பகுதி. இதனில் மூன்றும் சூத்திரம் முதல் பன்னிரண்டாம்சூத்திரம் வரையிலான பத்துச்சூத்திரங் களின் பொருள்கள் ஐம்பது திருவிருத்தங்களால் புகலப்பட்டுள. நாற்பத்தைந்து பகுப்புகளைக் கொண்டுள இவ்வைம்பது திருவிருத்தச் செய்திகளும். இந்த ஐம்பது திருவிருத்தச் செய்திகளே செய்யுள்வாரியாக இந்தக் கட்டுரை நூலில் விளக்கப்படுவன.

மேலே உள்ள உண்மை அதிகாரத்து முதற்செய் யுளாகிய இதனில், இவ்வதிகாரம் இயம்பப்புகும் பொருள்கள் இன்னின்னவை என்று தொகுத்துரைக் கப்படுகின்றது. மேலும், இதுகாறும் கூறப்பட்டன பொது அதிகாரப் பொருள்களாகும் என்பது நினை வுறுத்தப்படுகின்றது.

இனி, இப்பாடற்பகுப்புக்களைத் தனித்தனி இன் னின்னவை எனப் பேசுவோம். பாடற்பொழிப்புரை மேலேதரப்பட்டது.

இங்கிவை பொது இயம்பும் என்பர்கள் :

ஒவ்வொரு பொருளுக்கும் பொது எனவும் சிறப்பு எனவும் இருவித இயல்புகள் உண்டு. பொருள் உண்டா இல்லையா? உண்டாயின் அப்பொருளின் பொதுத்தன்மை யாது? இல்லையாயின் ஏன் இல்லை? இவற்றைத் தருக்கமுறையிலும் சாமானிய முறையிலும் கூறிச் சித்தாந்தப்படுத்துவது பொது இயல்பின் இலக்கணமாகும். இனி, அப்பொருளின் வெளிப்படை உண்மையை அறிந்த அளவோடுநில்லாமல், அப்பொருளின் உட்பண்பு எனப்படும் மாறு இயற்கையினை ஆராய்ந்து அவ்வாராய்ச்சிக்கேற்ப அந்தப் பொருளை அனுபவித்துப் பயன்கொள்ளுமுறையைச் சித்தாந்தப் படுத்துவது சிறப்பியல்பின் இலக்கணம் ஆகும். சித்தாந்தத்துக்கு இவ்விருவகையும் இன்றியமையாதன வாம். இந்த முறையில், சிவப்பிரகாசநூலில் இதன் ஆசிரியர், பதி - பசு - பாசம் என்னும் முப்பொருள்களும் உள்பொருள்களா? இல்பொருள்களா? என்பதை நூலின் முதல் ஐம்பதுசெய்யுட்களால் ஆய்ந்து, இம்மூன்றும் உள்பொருள்களே எனச் சித்தாந்தம் செய்யலுற்றார். மனிதப்பிறப்பை அடைந்துள்ள நமது பெத்தநிலைக்கு இப்பொதுஅறிவு தேவைப்படுவதாகும். மேலே கூறப்பட்ட முப்பொருள்களையும் இல்பொருள் என்பாரும் உலகில் உளர். அவர்களையும் பொதுமைகூறி ஓரளவு உண்மையறியச்செய்தல்முறைமையாதலின், பொது அதிகாரம் முதற்கண் கூறப்படலாயிற்று. ஆன்மாக்கள் மலத்துட்பட்டுள்ளன. ஆகலின் அவைகட்கு வேண்டுவது மலநீக்கமே. இச்செயலை ஆன்மாக்கள் தாமாகவே செய்துகொள்ளுகின்றவன்மை உடையன அல்ல. ஆதலால் மலநீக்கம்

செய்தலில் யாரேனும் மலமற்ற ஒருவர் உதவவேண்டி உள்ளது. மலமற்ற ஒருவர் கடவுளே. அவர், ஆன்மாக்களுக்கு மலபரிபாகம் வருவித்தற்காக உலகம் - உடம்பு - துய்ப்பு என்னும் மூன்றுவிதமான காரியங்களைச்செய்வித்து உதவுகிறார். இவ்விஷயங்கள் பெத்த நிலையுண்மையை உரைப்பன ஆகும். இதுபற்றியே பொதுவுரைத்தல் என்று குறிக்கின்றார் ஆசிரியர்.

இங்ஙனம் பொதுவும் உண்மையுமாக வகுத்து உரைத்தல், இவ்வாசிரியர்க்கு முன்பே ஞானிகளால் மேற்கொண்டு, வழிவழியாக வரும் மரபாதலின் 'இங்கிவை பொது இயம்பும்' என்றதோடு 'என்பர்கள்' எனவும் சேர்த்துரைப்பாராயினர் ஆசிரியர் எனலாம். எனினும், முதற்செய்யுள் விநாயகக்கடவுளை வழுத்து முறை கூறுகின்றது. அப்பால் நிட்கள பரசிவத்தை வணங்குதல்முதலாக அவையடக்கம்வரையில் உள்ள பொருள்களை 12 செய்யுட்கள் செப்புகின்றன. இதன் மேல் முதற்சூத்திரச்செய்திகளை எடுத்துரைப்பனவாக ஆறு செய்யுட்களும், இரண்டாம் சூத்திரச்செய்திகளை எடுத்துரைப்பனவாக 32 செய்யுட்களும் ஆக ஐம்பது செய்யுட்கள் பொது அதிகாரம் என்னும் தலைப்புட்பட்டவை என்பதை 'இங்கிவை பொது இயம்பும் என்பர்கள்' என்றவரிதெரிவிப்பதாம். இதன் மேல் உண்மை அதிகாரத்தில் என்னென்ன பொருள்கள் பேசப்படும் என்பதை ஆசிரியர் வரிசையாக இப்பாடலில் தந்துள்ளார். அவை வருமாறு :—

1. இதன்மேல் ஆன்மா......அறைகுவன் :

உலகம் உள்ளது. யாருக்காக? உலகம் தனக்காக இருக்கவேண்டுவதில்லை. கடவுட்பொருளுக்கு

உலகின்துணை தேவை இல்லை. பின் ஏன் உலகம் இருக்கவேண்டும் என்ற கேள்வி எழத்தான் செய்யும். ஒரு பயன் குறித்தே உலகம் இருத்தல் வேண்டும். அந்தப் பயனைத் துய்ப்பது யார்? உலகம் சடம். அது துய்க்காது. கடவுள், வேண்டுதல் வேண்டாமை இல்லான். ஆதலால் அவற்கு உலகப்பயன்ஒருபோதும் வேண்டுவதில்லை. எனவே உலகினால் ஆய பயனைத் துய்ப்பதற்கு வேறொருபொருள் இருந்தேதீரவேண்டும். அந்தப் பொருளையே உயிர் அல்லது ஆன்மா என்கி ரோம். ஆகவே உலகப்பயனை அனுபவித்தற்குரிய உயிர் உண்டெனக்கொள்ளப்படுதல்உறுதி. இதனால், நிமித்த காரணமாகிய கடவுட்பொருள் உண்டு; காரணமாகும் தொடர்பு உடைமை பற்றித் துணைக்காரண முதற் காரணமும் உண்டு; இவற்றால் விளையும் பயனைக்கொள் ளுதற்குரிய பசுக்கள் - ஆன்மாக்கள் உண்டு என்பது இயல்பாகவே பெறப்படும் என்க!

உயிர், கண்ணாற்காணப்படாமையால் இல்பொருள் எனல் தவறாம். சவம் காரியம் செய்வதில்லை. உயி ருள்ள உடம்பு காரியப்படுறது. காரிய நிகழ்ச்சிக்கு உடம்பு காரணமன்று; ஆகவே, காரணமாகிய உயிர் இருந்திடல் வேண்டும் என்னலாம். காரியத்தைக் கொண்டு காரணம் நிச்சயிக்கப்படுதலை அனுமானப் பிரமாணம் என்பர். முன்பு கூறப்பட்டவாறே, ஆன்மா வும், பொதுவும் சிறப்புமாகிய இருவகை இலக்கணங் களை உடைய பொருளாகும். மற்றும், ஆன்மாவின் உண்மையானது பிரமாணத்தாலும், இலக்கணத்தா லும் உணர்த்தப்படும். புகையால் நெருப்புண்மை அறிதல் பிரமாணமாம். கண்ணில்லாதவனும் அருகில் நெருப்பு இருத்தலை அதன் வெப்பத்தினால் அறிதல்

இலக்கணமாம். இனி, ஆன்ம இலக்கணம் பற்றிய விவரங்களை ஆசிரியர், இச்செய்யுட்குப் பின்வருகின்ற எட்டுத் திருவிருத்தங்களால் விவரிக்கின்றார். ஆதலின் அவ்விருத்தங்கள் விளக்கப்படுமிடத்து ஆன்மாவைப் பற்றிய விரிவான செய்திகளை அறியலாகும். சிவஞான போதத்திலும் சித்தியாரிலும் ஆன்ம இலக்கணம் மூன்றும் சூத்திரத்தில் சொல்லப்படுவது போன்றே, இந்த நூலிலும் மூன்றும்சூத்திரம் சொல்லும் விஷயங்கள் இம் மூன்றும் பகுதியால் கூறப்படுதல் காணலாம்.

2. (உயிர்) தங்கிய ஐந்தவத்தை அறைகுவன் :

ஆன்மாவைப்பற்றி உரைத்த பிறகு ஆசிரியர், அந்த ஆன்மா அறிவு மறைவுபட்டிருந்த நிலைமையையும், பின்னர்ச் சிறிது அறிவு தொழிற்படும் நிலைமையையும், முடிவில் அறிவு நிறைவடையும் சுத்தமான நிலைமையையும் உள்ளத்துக்கொண்டவராய், அறை போகிய அறிவுநிலை பெற்றிருந்தமைக்குக் காரணம் அது மலத்தால் மறைப்புண்டிருந்தது என்பதையும் பிறகு அந்த மலமறைப்பு நீங்குவதற்காக ஆன்மா ஐந் தவத்தைப்படுமுறைமையினையும் கூறலுறுவாராயினர். ஆன்மா, வியாபக அறிவினை உடைத்தாயிருத்தலை இயல்பாக உடையது. எனினும் மலமறைப்புடைமையால் அந்த வியாபகம் சுருங்கி இருக்கலாகிறது. இம் மலமறைப்பைக் குறைப்பதற்காக ஆன்மாத் தத்துவ, தாத்துவிக உடம்பைப் பெற்றிடும். தத்துவங்கள் ஆன்மாவுக்குச் சூக்குமமும் காரணமுமாகிய உடம்பாயிருக்கும். தாத்துவிகமானது தூல உடம்பாயிருக்கும். சூக்குமதேகம், அருவுடம்பாயிருப்பது; தூலதேகம், உருவுடம்பாயிருப்பது. தத்துவம் என்பது கருவியாம்.

தாத்துவிகம் என்பது காரியப்பொருளாம். ஆன்மா, தத்துவக்கூட்டக் கருவிகளில் ஒன்றன்று. ஆன்மா, கருவிகளோடுகூடும்; பிரியும். கருவிகளோடு கூடியும், பிறிதொன்றைக் கூடாமலும் உள்ள அறிவின் இருப் பிடமே உயிரின் இருப்பிடமாகும். மலம்நீங்கும்வரை ஆன்மாவுக்குத் தத்துவவடிவம் உண்டு.

ஒருபொருளைச் சுத்தப்படுத்துவதற்குப் பலமுறை கள் உள. பொன்னைச் சுத்தப்படுத்துவதற்குப் பல தடவை புடம்போடப்படுகிறது. உமி, கரி, நெருப்பு, காற்று, குகை முதலிய கருவிகள் துணையாகிக் காரி யப்படுதலால் பொன் சுத்தப்பட்டு மாற்றுயர்வு பெறு கிறது. அவ்வாறே மலமறைப்புற்ற உயிரும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் எனப்படும் கருவிக ளோடுநிற்கும் அவத்தைகளையும், கருவியில்லாத துரியா தீதமாகிய அவத்தையையும் அடைந்து அடைந்து மலவன்மை மலினப்படப்பெற்றுத் தூய்மை எய்தும். இதன் விவரங்களை ஆசிரியர், பின்னர் வரும் பாடல் களால் விளக்குவர். ஆங்கு விபரம் காண்போமாக !

3. தன் உண்மை உணர்த்தும் தன்மை......
அறைகுவன் :

ஆன்மா, கருவிகளோடுகூடிக் காரிய அவத்தை அடைந்து தூய்மை எய்தும் என மேல் கூறப்பட்டது. அப்படியானால், ஆன்மாவானது கருவிகளுடன் தானே கூடுமா? யாரேனும் கூட்டுவிக்கக் கூடுமா? என்ற ஐயம் எழுதல் கூடும். கருவிகளை அறிந்து தானே கூடும் திறமை ஆன்மாவுக்கு அறிவு மறைப்புண்மை யால் இல்லை. தன்னையே அறியமாட்டாமற் கிடக்கும் ஆன்மாவுக்குக் கருவிகளை அறிந்து கூடும் இயல்பு

இல்லை என்பதில் வியப்பு ஏதும் இன்றும். ஆகவே, ஆன்மாவுக்கு மலத்தை நீக்கி அறிவிக்கும்பொருட்டு மலமற்றவனுகியபெருமான் தத்துவங்களைத் தோற்று வித்தும் கூட்டியும் துணைபுரிகின்றுனுவன். இவ்வுதவி யினுல்தான், ஆன்மசிற்சத்தியிருப்பு உணரப்படுகின் றது. இந்த விவரமும் அதுபற்றிக் கூறப்படும் விருத் தங்களை விவரிக்குமிடத்துக் கூறப்படும்.

4. ஒளிபொங்கு ஞானவாய்மை ... ...
அறைகுவன்:

ஆன்மாக்களோ எண்ணில. அவற்றின் தராதரங் களும் கணக்கில. தத்துவக்கூட்டங்களும் அப்படிப் பட்டவையே. இவற்றையெல்லாம் எப்படி அறிந்து தவறில்லாமல் கூட்டியும் பிரித்தும் சிவபெருமானுல் செயல்புரியமுடியும் என்று நாம் எண்ணக்கூடும். சிவ பெருமான் நிறைந்த ஞானமயன். அவனுல் அறியப் படாதது எதுவும் இலது. அங்ஙனம் அறிந்து செயல் புரிவதனுல் சிவபெருமானுக்கு அறிவுக்குறை நேரிடுவ தில்லை. வாயுமண்டலத்துட்பட்டுள்ள உயிர்கள் சுவா சிப்பதனுல் வாயுமண்டலம் வற்றிப்போவது இல்லை. நிறைந்த ஞானநிலயத்துட்பட்டிருக்கும் உயிர்கட்கு உதவிபுரிவதனுல் சிவபெருமானுக்கு ஏதும் குறைவோ மாறுபாடோ ஒருபோதும் உண்டாவதில்லை. நிறைந்த ஞானம் குறைவுபடுவதில்லை என்பதை 'பொங்கு ஒளி ஞானம்' என்றதொடர்காட்டும். அத்தகைய ஞானப் பொருள் என்றும் நீக்கமற நிற்பதாதலின் 'வாய்மை' எனப்பட்டது. ஆகவே, இதுபற்றிக்கூறும் விருத்தங் களால் சிவனுடைய பேரறிவாய் நிற்கும்முறைமை தெரியப்படலாகும் என்க!

5. அதன்பயன்......அறைகுவன் :

மேற்கூறப்பட்டபடி, பேரறிவுப்பொருள் உதவி புரிதலால் என்னபயன் ஆன்மாவுக்கு ஏற்படும் என நாம் கருதக்கூடும். சிவம் இங்ஙனம் துணைபுரிவதனால் ஆன்மாவுக்குள்ள மலமறைப்பு அகலலுறும். இதன் பயனாகப் பாசஞான பசுஞானங்கள் விலகலுறும். முற்றறிவு எனப்படும் சிவஞானம் விளைதலுறும். இவ்வாறான சிவஞானவிளைவினால், ஆன்மா, தன்னை - தன் இயல்பினை - அறியலுறும். இதனை ஆன்மதரிசனம் என்பர். இதனால் ஆன்மா மலநீக்கம்பெற்றுத் தூய்மை உறும். இதனை ஆன்மசுத்தி என்பர். இவற்றின்பயனாக ஆன்மா, உண்மைமுத்தி வாய்ப்புக்கான சீவன்முத்தித்திறம் இம்மையிலே வாய்க்கப்பெற்றிடும். இதனை ஆன்மலாபம் என்பர். இங்ஙனம் இம்மூன்று நலங்களையும் நண்ணப்பெறுதலே இங்கு அதன்பயன் எனக் குறிக்கப்பட்டது.

6. புனிதன் நாமம்......அறைகுவன் :

இவ்வாறு சிவத்தைச்சார்ந்து முத்திப்பயன் அடைவதே பிறப்பினாலாகிய பயன் என்பதை, நாம் வேதம் - ஆகமம் - சாத்திரம் முதலியவற்றால் கற்றும், கேட்டும், உபதேசம் பெற்றும், அவ்வழி நின்றும் அறியலாம். ஆனால் வேதாகமங்களாகிய நூல்களை யாவரும் ஓதி அறிதல் எளிதன்று. கற்றோர், கல்லாதவர் ஆகிய யாவருமே பக்குவியர்களாகிப் பதம்பெறவேண்டும் என்பதே இறைவன் திருவுள்ளம். ஆகையால், வேதாகமங்களைக் கற்றோரும் கல்லாதோரும் எளிதில் ஓதக்கூடியதான மந்திரமொழி ஒன்று ஞானிகளால் தரப்பட்டுள்ளது. அந்தமந்திரமொழி வேறெதுவும் அன்று.

அது மலமிலானாகிய இறைவனுடைய திருநாமமே ஆகும். சாதாரணமாகவே ஓசைகட்கு வன்மை உள்ளது. அதிலும், வரன்முறைப்பட்ட வாசகங்கட்கு அறிவைப்பெருக்கும் வன்மை பெரிதும் உண்டு. இது நாத தத்துவத்தின் சிறப்பாம். ஞானம் என்பது அபர ஞானம்×பரஞானம் என இருவகைப்படும். நூலறிவெல்லாம் அபரஞானம் எனப்படும். பரஞானம் என்பது சிவமேயாகும் ஞானாசாரியரால் பக்குவநிலை தெரிந்து உபதேசமுகமாக அனுபவமுண்டாக்குகைக்காகத் தரப்படுவதாகும். அபரஞானமென்பது வேத ஆகமங்களை உணர்த்திடும் சொல்லாகும். அளவற்ற வேதாகமங்களின் கருத்துக்களையெல்லாம் சுருக்கி உரைத்தால் அம்மொழி இறைவன் திருநாமமேயாகும். இதுபற்றியே, "வேதநான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே" எனத் தமிழ்மறை தெளிவுறத் தெரிவிக்கின்றது.

இந்த மொழி, பதி - பசு - பாசமெனப்படும் திரி பதார்த்தங்களை நினைவுறுத்துகின்றது. மேலும் நாம் அறியவேண்டிய ஐந்து முக்கியமான கருத்துக்களை அறிவிக்கின்றது. "ஐந்தெழுத்து அருள்நிலை" என்ற தலைப்பினடியாகத் திருவருட்பயன், உண்மைவிளக்கம் என்னும் சாத்திர நூல்கள் பஞ்சாக்கரமந்திரம் பற்றிப் பேசுகின்றன. நம் உய்திக்காக நாம் அறிந்தாக வேண்டியவை 1. அறிவுமறைப்பு, 2. மலமறைப்பு, 3. சிவம், 4. அருள், 5. உயிர் என்பனவாகும். இவற்றைத் திரோதை - மலம் - கடவுள் - திருவருள் - ஆன்மா என முறையே செப்புவர். இவற்றை நமசிவய என்னும்ஐந்தெழுத்துமந்திரம், தன்னைக்கருதுவோர்க்கு நினைவூட்டிக்கொண்டே உள்ளது.

இங்ஙனம் ஐந்தெழுத்திருத்தலை "இறை சத்தி பாசம் எழில் மாயை ஆவி" எனத் திருவருட்பயன் கூறிக் காட்டுகின்றது. மற்றும், வெளிப்படையாக இந்த ஐந்துவிதமான கருத்துக்களை அறிந்துகொண்ட பிறகு, முத்திப்பேற்றுக்கு மேற்கூறப்பட்ட மந்திரம் எங்ஙனம் நின்று வழிகாட்டும் என்பது சூக்குமமாகத் தெரிவிக்கப்படும். இதனை, "சிவன் சத்தி சீவன் செறு மலம் மாயை - அவஞ்சேர்ந்தபாசம் மலம் ஐந்தகலச் - சிவன் சத்தி தன்னுடன் சீவனுர்சேர - அவஞ்சேர்ந்த பாசம் அணுக கிலாவே" என்னும் திருமூலர் வாக்கா லும் தெரியலாம். மேலும் இம்மந்திர எழுத்துக்கள் மலம் மாயைகளை அகன்றால் சிவம் கண்டு வாழமுடி யும் என்னும் சிவயசிவ என நின்று தெரிவிக்கும். இதனை நிற்கும்முறை என்பர். இவற்றின்விரிவெல்லாம் ஆசிரியரால் பின்னர்க் கூறப்படும். முடிவுறக்காணின் புனிதன் நாமமாகிய ஐந்தெழுத்தே ஆவி சாவிபோகா மல் காப்பாற்றுகின்றதெனத் தெரியலாம்.

### 7. அங்கதில் அணைந்தோர் தன்மை அருளினுல் அறைகுவன்:

ஐந்தெழுத்தை அடைவுமுறையில் ஓதியும் உணர்ந் தும் அம்முறையில் நின்றும் ஒழுகுபவர்கள் இறை பணிநிற்கும் நிறைவு உடையராய் அணைந்தோர் எனப் படுவர். 'அங்கு அதில்' என்றதொடர், படிப்படியாகத் தூலம் சூக்குமம் காரணம் எனப்படும் ஐந்தெழுத்து மந்திரநெறியில் செல்லுதலை உணர்த்திடும். இங்ஙனம் செல்லுதலால், ஆன்மாவானது, பூதான்மநிலை கடந்து- அந்தரான்மநிலை அடைந்து, பிறகு தத்துவான்ம நிலை உற்று, புருடதத்துவமாய்நின்று சீவான்மாஎனப்பட்டு

மந்திரமயமாகி மந்திரான்மா என்னும் நிலை பெற்று, முடிவிலே அத்துவித பாவனையால் பரமான்மா நிலை யுற்றுநிற்கும் பேற்றினைப்பெறும். உப்பானது, தன்னுடைய கண்டிதத்தன்மையும் கடினத் தன்மையும் நீங்கிக் கடல்நீரோடு ஒன்றுவதுபோன்று திரோதமலங்கள் நீங்கப்பெற்று ஆன்மாவானது சிவத்துக்கடிமை ஆகி அதனொடு இயைப்புப் பெற்று ஞேய இன்ப சிவத்தில் அழுந்திடும். இதுவே அணைந்தோர் இயல்பு எனச் சுருக்கமாகச் சொல்லப்படும். இவர்களை, 'உணர்வின் ஒடுங்கி இன்பு ஒடுங்கத் தூங்குபவர்' என்பர். இவர்களது தன்மையே ஆனந்த நித்திரைத்தன்மை எனப்படும். இவற்றின் விரிவும் பின்னர்த் தரப்படும். மேற்கூறப்பட்ட இவற்றையெல்லாம் இந்நூலாசிரியர் பெருமானுடைய திருவருளால் கூறுகின்றாராவர். இக்கருத்தினை இவ்வாசிரியரே கூறும், "கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து...உரைப்பன்" என்னும் வாக்காலும் தெரியலாம். ஆனதுபற்றியே 'அறைகுவன் அருளினாலே' எனப்பட்டதென்க!

இனி, மேலே சொல்லப்பட்ட செய்திகள் ஆசிரியர் விருத்தப்பாக்களால் எடுத்துரைக்கும்வழியே விளக்கம் செய்யப்படும். இம்முதற்செய்யுளால் உண்மை அதிகாரத்தின் இயல்முறை நாம் தெரிதல்கூடும்.

## 2. ஆன்மா உடம்புள் உறைதல்

*செறிந்திடும் உடலுள் மன்னிச்,*
*சேர்புலன் வாயில் பற்றி*
*அறிந்(து)அதில் அழுந்தும்; என்றும்*
*அறிந்திடா(து) அறியும் தன்மை;*

*பிறிந்(து)அடை அஞ்சு அவத்தை*
*பெருகிய மலத்தால் பேணி*
*உறும்;தனி அதீதம் உண்மை*
*உயிர்க்கென உணர்த்தும் அன்றே.*

## பொழிப்புரை

ஆன்மாவானது கன்மத்துக்கு ஈடாகப் பொருந்தின சரீரத்துள்ளே நிலைபெற்று, புசித்தற்கு யோக்கியமான விடயங்களை இந்திரியங்களாலே கண்டு, அந்தக்கரணங்களாலே கிருகித்து, வித்தையினாலே அறிந்த அவ்விடயத்திலே அழுந்திச் சுக துக்கங்களை அனுபவியாநிற்கும். (இதில் காண்டலும் கிருகித்தலும் என்னும் பொருள், பற்றி என்பதனால் பெறப்பட்டது.) இனி இவ்வரிக்குக் கலாதிகளால் அறிந்து மனாதிகளால் பற்றி இந்திரியங்களால் கண்டு பிரகிருதியால் அழுந்தும் எனவும் உரைப்பர்.

அறியும் தன்மையை, (அறிவிக்கும் திருவருளும், புசிப்பிக்கும் சாதனமான கருவிகளும், போக்கியத்தின் வரலாறுமான இவற்றில்) ஒன்றும் அறியாது. கருவிகளைப் பிரிந்த அடைவாகச் சாக்கிரம் முதலிய அவத்தைகளிலே மிகுந்த ஆணவமலத்தாலே மறைப்புண்டு (அவத்தைப்படுகிறோம் என்னும் தன்மை தெரியாமல்) அழுந்தும். இந்தக் கருவிகள் எல்லாம் நீங்கி, ஆணவமலம் நீங்காத ஏகாந்தமான அதீதாவத்தை அவ்வான்மாவுக்கும் பெத்தத்தில் உண்மை என்று திவ்வியாகமம் சொல்லும்.

மற்று, அறியும் தன்மை பிறிந்து எனக் கூட்டி அறியும் உண்மையையும் விட்டு எனக் கூறுவாரும் உளர். பேணி=மறைக்கப்பட்டு.

## விளக்கவுரை

இந்தச்செய்யுள் ஆன்ம இலக்கணத்தைச் சொல்வதாகும். ஆன்மா, ஏதும் அறியமாட்டாமல் ஆணவ மலத்துட்பட்டுக் கிடப்பது கேவலாவத்தை எனப் படும். இந்தக் கேவலாவத்தையிலும் ஆன்மாவுக்கு மிகச் சூக்குமமான விருப்பு வெறுப்புக்கள் மலமறைப் பின்வன்மை மென்மைகட்கு ஏற்ப உண்டு. இதனை மூலகன்மம் என்பர். இதனைத் துடைத்தற்பொருட் டாக இறைவனுல் எல்லா உயிர்கட்கும் ஒரேமாதிரி யான மூல உடம்பு தரப்படுகிறது. இதனைக் காரண உடம்பு என்றும் சொல்லுவர். முத்தி அடையும் வரையில் இந்தக் காரண உடம்பு நீடித்திருக்கும். முத்திநிலையில் இஃது நீங்கிப்போம். அதன் பிறகு பிறப்பு இல்லை. பிறப்பு நீக்கமுறுதற்கு இவ்வுடல் காரணமாதலின் காரணவுடம்பு எனப்படும். இதனுள் சேர்ப்புண்ட உயிரானது, அதன் விருப்பு வெறுப்பு கட்கு ஏற்ற புசிப்பினை நுகர்தற்குக் கருவியாகச் சூக் கும உடம்புட்படும். சூக்கும உடம்பைப் புரியட்டக உடம்பு எனவும், அருவுடம்பு எனவும் கூறுவர். சத்தம், ரூபம், பரிசம், இரதம், கந்தம் எனப்படும் தன் மாத்திரை ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் மூன்றும் ஆகிய எட்டும்கூடிய ஒன்றே புரியட்டக உடம்பு அல்லது சூக்குமதேகம் எனப்படும். இந்தச் சூக்கும தேகத்தை உள்ளீடாக உடையது தூலசரீரம். இது பருவுடம்பு எனப்படும். இதனை நாம் கண்ணுல் பார்க் கலாம். இந்தத் தூல உடம்பு காரியம் செய்வதற்கு அனுகூலப்படுவது. காரியமானது விருப்பப்படிச் செய் யப்படுவதாகிய நன்மை தீமைகள் எனப்படும் கன்மம் ஆகிறது. இது வினை எனவும்படும். தூல உடம்பு

இந்த வினைக்கேற்ப உயிர்கட்குப் பிறப்புத்தோறும் மாறி மாறி அமைவுறும். இந்த உடம்புடன் கூடிய தான உயிரின் நிலையே சகலநிலை அல்லது சகலாவத்தை நிலை எனப்படுகிறது.

பிறப்பு மாறுகையில் உடம்பின் மேற்சட்டை மாறுவதுபோன்று தூலஉடம்பே மாறுகின்றது. சூக்குும - காரணங்கள் மாறுவதில்லை. இந்தத் தூல உடம்பும், கன்மப்புசிப்பிக்கு ஏற்றவாறு மாறிமாறி வரும். இங்ஙனம் மாறிமாறிவரும் உடம்புகளை நாமே உண்டாக்கிக்கொள்வதில்லை; உண்டாக்கிக் கொள்ளவும் முடியாது. வினைப்புசிப்புக்குத் தக்கவாறு இறையருளால் இங்ஙனம் மாற்றி அமைக்கப்படுகின்றது. இதனால், உடலமைப்பினைப் பெறுதலிலேகூட நமக்குச் சுதந்தரவீனம் இருத்தலை அறியலாம். ஆனதுபற்றியே இந்நூலாசிரியர், " இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை அண்ணல் அருளால் நண்ணி " என முன்பே கூறிப் போந்துளர். ஆகவே, கன்மத்தின் அளவுக்கேற்பவே சரீரமானது பிறப்புத் தோறும் செறிந்திடுவது தெரியலாம்.

பிறப்புத்தோற்றம் ஆணவமல பரிபாகத்துக்காகவே கன்மஅளவுக்கேற்பக் கடவுளால் தரப்படுகின்றது. உயிரானது இங்ஙனம் அமையும் உடம்புதோறும் பொருந்திப் பொருந்தி இருந்து வினைகளைப் புசித்தலும் வினைகளைச் செய்தலும், வினையனுபவத்தால் அயர் வெய்தலும் அடையும். இதுபற்றியே, " செல்லாஅநின்ற இத்தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்" என்கிறார் மணிவாசகர். இறையருளால் கன்மத்துக்கேற்ப உடல்கள்

மாறிமாறி வருவன ஆகலின் 'செறிந்திடும் உடலுள் மன்னி' எனப்பட்டது. ஒவ்வொருவிதமான உடம் புள்ளும் உயிர், அலுப்புறுமளவும் அனுபவமுள்ளள வும் தங்கி உடம்பையே தாளுகமயங்கித் தங்கி வாழ் தலின், 'மன்னி' எனப்பட்டது. நாம்பெற்றுள்ள இப் பிறப்பிலே மனம் இறைவனைக் கருதவேண்டும்; கற்க வேண்டும்; கசியவும்வேண்டும். இவ்வாறின்றி வறிதே இருத்தலையும் இச்சொல் தெரிவிப்பதாகலாம். "முடை யார் புழுக்கூடு இதுகாத்து இங்கு இருப்பதாக முடித் தாயே" எனத் திருவாசகம் கூறுவதும் இங்குச் சிந்தித் தற்பாலதே.

சேர் புலன் வாயில் பற்றி அறிந்து அதில் அழுந்தும் :

புலன்கள் உலகவிஷயங்களைப் பிறப்பின் இயல்புக் கேற்றவிதத்தால் பொறிகளின் வழியால் சென்று பற் றும். இதனை ஐம்புல அறிவு என்பர். இந்த அறிவு தொகையில் ஐந்து எனப்படுவது. என்ருலும் பிறப் புக்கள்தோறும் வேறுபடும். ஆதலினுல்தான் உயிர்களை ஓரறிவுயிர் முதலாக ஐயறிவுயிர் ஈருக வகுத்துள்ளனர். உயிர்கள் அடைந்துள்ள (அல்லது) செறிந்து மன்னி யுள்ள உடலங்களிலுள்ள பொறிகளின் வாய்ப்புக்கு ஏற்பவே ஐயறிவுகள் படிப்படியாக நிகழும். புல், மரம் முதலன ஓரறிவு (தொடுவுணர்ச்சி) மாத்திரம் உடையவை. மற்றைய நான்கறிவுகளும் பொறிகளின் வாய்ப்பு இன்மையால் மங்கிக்கிடந்திடும். இவ்வறிவு விவரங்களை இலக்கண நூல்களால் அறியலாம். பொறி என்பது வீட்டிற்குள்ள பலகணிபோன்ற வழிகளாம். புலன் என்பது பொறிவழியாக வெளிவிஷயங்களில்

செல்லும் அறிவாம். இந்த அறிவு, உயிர் அடைந்திடும் உடலங்களிலுள்ள பொறிகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப வந்துசேர்தலினால் 'சேர் புலன்' எனப்பட்டது.

பார்வையறிவு இருப்பினும், கட்பொறி இல்லா தான் உருவங்களைக் காண்டல் இயலாது. ஆகவே புலன்கள், பொறிகளின் உதவிகொண்டே விஷயங்களை ஐவகையாகக் கிரகிக்கும் என்பது தெரியலாம். இது பற்றியே பொழிப்புரையில், 'இந்திரியங்களாலே கண்டு அந்தக்கரணங்களாலே கிரகித்து' எனப்பட்டது. ஆதலால், 'வாயில் பற்றி' என்கிறது செய்யுள். பொறிகளும் புலன்களும் கருவிகளே. அவை அறிவதில்லை. ஆன்மாவே, சுகம் × துக்கங்களை அனுபவிக்கிறது. ஆன்மாவின் அறிவு தொழில்களை விளக்குவதற்கு இந்திரியம் - அந்தக்கரணம் - கலாதி என்கிற மூவகைப் பட்ட கருவிகள் தேவைப்படுவன. ஒரு பொருளை அறிய விரும்புவோர்க்கு இந்திரியங்கள் புறத்துத் தோன்றி அறிந்து தொழிற்படும் கருவிகளாம். மனம் முதலிய கரணங்கள் இந்திரியங்களால் அறியப்பட்ட பொருளை உடம்பின் உள்ளே நின்று பகுத்தறியும் அந்தக்கரணங்களாம். கலாதிகள் எனப்படுபவை அந்த அந்தக்கரணங்களால் அறியப்பட்ட பொருள்களில் விருப்பு × வெறுப்பு உற்று ஆன்மாவின் இச்சை ஞானம் கிரியைகளைப்பொருந்தச்செய்து கட்டுப்படுத்தும். ஆகலின் இவை உள்ளந்தக்கரணங்கள் எனப் படும். இந்திரியங்கள் புறக்கருவிகளாம். மனம் முதலன அகப்புறக்கருவிகளாம். கலை முதலன அகக்கருவி களாம். ஆகவே ஆன்மா ஒருவிஷயத்தை அறிவதற்கு இம் மூவகைக் கருவிகளும் தொழிற்படும். இதனையே இங்குள்ள 'அறிந்து' என்னும் சொல் குறிப்பதாகும்.

புறக்கருவிகள் சரீரவடிவாயிருத்தலால் அகப்பூதம் எனப்படும். உலகரூபமாயிருப்பன புறப்பூதங்கள் எனப்படும். உலகரூபமான புறப்பூதங்களால் ஆகிய இன்பதுன்பங்களில் ஆன்மா ஈடுபட்டிருப்பதை விஷயங்களில் அழுந்துதல் என்பர். அழுந்துதல் என்பது அனுபவித்தலாம். எனவே உயிரானது புறப்பூதக் கருவிகளால் துய்ப்பது இங்கே 'அதிலழுந்தும்' எனப் பட்டது. 'அதில்' என்பது உலகவிஷய சுக துக்க மோகாதிகளைக் குறிக்கும் சொல்லாம் என்க! உயிர்... பற்றி அறிந்து.........அழுந்தும் என்பது வாக்கிய முடிபாம். இனி இவ்வரிக்குக் கலாதிகளால் அறிந்து, மனாதிகளால்பற்றி, இந்திரியங்களால் கண்டு, பிரகிருதியால் அழுந்தும் எனவும் பொருள் உரைப்பர்.

அறியும் தன்மை ஒன்றும் அறிந்திடாது :

உலக சுக போகங்களை அனுபவிப்பது கருவியன்று. அனுபவம் ஆன்மாவினுடையதே என்பது உய்த்துணரின் புலப்படாமற்போகாது. ஆன்மாவானது இந்தச் சகலநிலையிலே மயங்கிய அறிவை உடைமையினாலே, கருவிகளாகிய தத்துவங்களையே தான் என்று எண்ணிக் கருவிகள்வேறு, தான்வேறு எனத் தெரிவதில்லை. மூன்றும் சூத்திரம் இப்படியெல்லாம் ஆன்மாவானது மயங்கித் தன்னையே கருவிகளெனக் கருதிக் கிடப்பதையே தெரிவிக்கின்றது. "உளது இலது என்றலின் ... ... மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா" என்பது மூன்றும் சூத்திரம். ஆன்மா, கருவிகளின் உதவியால் எவ்வெவ்வாறு அறிவடைகிறதென்பதையும், பிரகிருதி விஷயம் எவ்வெவ்வழியால் தன்பால் வந்தடைகிறது என்பதையும் தெரிவதில்லை.

கண்ணிந்திரியம் ஒரு பொருளைக் காணும்; ஆனால் பார்க்கிறோம் என அறியாது. இப்படியே பிற கருவி களும் அறியும்வாயிலாக உள்ளனவேயாகுமல்லாமல் அறியமாட்டா.

உண்மையாய்ப்பார்த்தோமானால் சில சிறந்த தத்து வங்கள் அறிவிக்கின்றன; சில தத்துவங்கள் அறிதற்கு வழியாகின்றன; மற்றும் சில தத்துவங்கள் அனுபவத் துக்குத் துணையாகின்றன என்பது தெரியப்படும். இந்த முறைமையைச் சுத்த தத்துவங்கள் (திருவருள்) அறிவிக்க, கலையாதி தத்துவங்கள் அறிவை எழுப்பிட, ஆன்ம தத்துவங்கள் அனுபவப்படுத்தும் கருவிகளாகி உதவுகின்றன எனச் சொல்வர். ஆன்மா அறிவதற்கு இந்த முறைமையே மேற்கொள்ளப்படுகிறது. இதனை ஆன்மாச் சற்றும் அறிகிறதில்லை. ஆனது பற்றியே 'அறியும் தன்மை ஒன்றும் ... அறிந்திடாது' எனப் பட்டது. மூன்றுவித முறைமைகளில் ஒன்றையும் ஆன்மா அறியமாட்டாமையால் 'ஒன்றும்' எனப் பட்டது என்க!

பிரிந்து அடை அஞ்சு அவத்தை பெருகிய
மலத்தால் பேணி உறும் :

மேலே கூறப்பட்டவற்றால் ஆன்மாவுக்குக் கருவி களுடன் கூடாத நிலை (கேவல நிலை) ஒன்று உண்டு எனவும், கருவிகளுடன் கூட்டுறவுடையதாகிய (சகல நிலை) ஒன்று உண்டு எனவும் ஏற்படுகின்றது. இவ் விரண்டையும் கடந்ததே சுத்தநிலை எனப்படும். கேவல நிலையில் ஆன்மா ஆணவமலமறைப்புற்று அறிவற்றுக்

கிடக்கும். சகலநிலையில் கருவிகளினுடைய துணை ஏற்படுவதனுல் ஒரு சிறிது அறிவு விளங்கப்பெறும். எனினும் இதனுல் ஏற்படும் அறிவு மயங்கிய அறிவாகும். இந்த மயங்கிய அறிவுநிலையிலே அறிகருவிகளாக உதவும் தத்துவங்கள் ஆன்மாவுடன் சில சந்தர்ப்பங்களில் கூடும்; வேறு சில சந்தர்ப்பங்களில் பிரியும். இங்ஙனம் கருவிகள் கூடுதலும் பிரிதலும் செய்யும் நிலைமையை 'அவத்தைநிலை' என்பர். இவ்விதமான அவத்தைகள் ஐந்து உள என்கிறது இவ்வாக்கியம். சாக்கிரம் - சொப்பனம் - சுழுத்தி - துரியம் - துரியாதீதம் என்பன இந்த ஐந்து அவத்தைகட்கும் பெயராகும். ஆன்மா புண்ணிய பாவ பலன்களை அருந்துதற்கு இந்த ஐந்து அவத்தைகளும் துணையாகும்.

சாக்கிரம் என்பது, ஆன்மா எல்லாக் கருவிகளுடனும் கூடியிருக்கும் அவத்தையாம். சொப்பனம் என்பது, சிலகருவிகள் தொழிற்படாமல் அதாவது தூலதேகம் தொழிற்படாமல் கனவோடு நிற்கும் அவத்தையாகும். சுழுத்தி என்பது, உறங்கி விழித்த பிறகு 'ஒன்றும் தெரியவில்லை; சுகமாய்த்தூங்கினேன்' என்று சொல்லப்படும் அவத்தையாம். துரியம் என்பது, பிராணவாயு இயக்கத்துடன் மூர்ச்சையாய் இருந்து தெளிந்தபிறகு 'ஒன்றும் தெரியவில்லை' என்று சொல்லப்படும் அவத்தையாம். துரியாதீதம் என்பது, பிராணவாயு இயக்கமின்றி மூர்ச்சையாய்க் கிடக்கும் அவத்தையாம். ஆன்மாவானது, அருந்துதல்புரியும் தன்மையை, "சூக்கும தேகியாகித் தூல ரூபத்தின் மன்னி" என்னும் சித்தியார்ப் பாடலால் நன்கறியலாம்.

கேவலத்தில் அறிவு இச்சை செயல்கள் விளங்கப் பெறுமல் நின்றது ஆன்மா. பிறகு மாயையில் கலக்குண்ட பாகத்தே பொருந்தலுறும். அப்போது அறிவு இச்சை செயல்கள் பொதுவகையால் விளங்கலுறும். அதாவது ஏகதேசமாய் விளங்கலுறும் என்பதாம். அப்போது ஐந்தவத்தை மருவும். ஐங்கோச உபாதி உறும். சார்ந்ததன்வண்ணமாய் வசிப்புண்டு போக்கு வரவு புரியும். அப்போது ஐங்கோச உபாதியுற்றிடும். ஐங்கோசம் என்பன:- அன்னமயகோசம் (தூல உடம்பு); பிராணமயகோசம் (சூக்குமஉடம்பு); மனோமயகோசம் (குணசரீரம்); விஞ்ஞானமயகோசம் (கஞ்சுகசரீரம்); ஆனந்தமயகோசம் (காரணசரீரம்) ஆம். ஆன்மா இந்தஐங்கோசங்களில் கட்டுப்பட்டுப் போக்கு வரவு புரியும். இந்தவிதமான ஐங்கோசங்களினிடமாகக் கூடிஞலன்றி ஆன்மாவுக்கு அறிவு நிகழாது.

இனி, ஐந்தவத்தை இயல்புகளை ஆசிரியர் செய்யுள் முகமாகக் கூறுமிடத்தே விவரிக்கப்படுதல் காண்க! அது நான்காஞ்சூத்திரம்பற்றிவரும் நான்கு செய்யுட்கள் விளக்கப்படும் இடமாம். (மலத்தால் பேணி= மலத்தால் மறைக்கப்பட்டு.) 'பெருகிய மலம்' என்பதனுல் மலத்தின் வன்மையை உணரலாகும். அவத்தைப் படும்போது ஆன்மா தன்னுண்மையை, மலமறைப்பால் அறியவருதலில்லை என்க!

**தனி அதீதம் உயிர்க்கு உண்மை என உணர்த்தும் அன்றே:**

கோசங்கள் ஐந்தென்பதை முன்பு கண்டோம். ஆன்மா மேலே கூறப்பட்ட கோசங்களில் எதையும்

சேர்ந்த ஒன்றன்று. இவற்றின்வேருனதாகும். ஆன்மா அன்னமய கோசத்தை விட்டுப் பிராணமய கோசத்திலும், பிராணமய கோசத்தைவிட்டு மனேமய கோசத்திலும், மனேமய கோசத்தை விட்டு விஞ்ஞானமய கோசத்திலும்,விஞ்ஞானமயகோசத்தைவிட்டு ஆனந்த மயகோசத்திலும் நிற்கும் முறைமை உடையது. அதாவது மேலே சொல்லப்பட்ட அடைவே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்படும் ஐந்துவித அவத்தைகளே அடைந்திடும் என்பதாம். விழித்திருக்கும் நிலையில் ஆன்மாவானது, சாக்கிராவத்தையில் ஐங்கோசங்களேயும் கூடிநின்று அக்கோசக் கருவிகளால், காணப்பட்ட கனவைச் சொல்லும். சுழுத்தியில் ஒன்றும் தெரியாதிருந்த சுகமாயிருந்த நிலையைக் கருதும். சுக அனுபவமும் பிராணவாயுவின் இயக்கமும் இன்றி மூர்ச்சையுற்றிருந்த துரியம் - துரியாதீதம் ஆகியவற்றைச் சுகானுபவம், பிராணவாயுவின் இயக்கம் இவற்றை அடையுங்கால் இம் மறுதலையனுபவங்கொண்டு அறியும்.

மற்றும் சாக்கிராவத்தைக்குக் கருவிகள் முப்பத்தைந்தாம். சொப்பனுவத்தைக்குக் கருவிகள் இருபத்தைந்தாம். சுழுத்தியவத்தைக்குக் கருவிகள் மூன்றும். துரியாவத்தைக்குக் கருவிகள் இரண்டாம். தனி அதீதமெனப்படும் துரியாதீத அவத்தைக்குக் கருவி ஒன்றே ஆகும். “நோக்கிய துரியாதீதம் நுவலின் மூலத்தின் ஒன்றே” என்பது சித்தியார்.

ஆன்மா, ஐந்தவத்தையைப்பொருந்திநிற்றல் அதன் தடத்த இலக்கணமாம். துரியாதீதத்தானமாகிய மூலாதாரத்தில் நிற்கும் கருவி, புருடன் ஒன்றே. வித்தியா

தத்துவம் ஏழு. அவற்றுள் புருடன் என்னும் தத்துவம் ஒன்று. அது நீங்கிய கலாதி தத்துவம் ஆறு. இதனோடு சிவத்துவம் ஐந்தும் கூட்ட அவத்தைக்கு ஏதுவாகாத தத்துவங்கள் பதினொன்று எனப்படும். கலாதிகளுடன் கூடிய உயிரே புருடதத்துவம் எனப்படும். எனவே புருடதத்துவம் உயிரன்றென்ப. ஆதலின், புருடன் தொழிற்படுவதற்கு ஏதுவாயிருப்பதேயல்லாமல் தொழி லுக்கு ஏதுவாயிருப்பதன்றாம். அதீதத்தில் கேவலா வத்தைக்குக் கருவிகள் யாவும் நீங்கி ஆணவமலத்தால் மறைப்புண்டிருப்பது இயல்பாம். கருவிகளோடு கூடி நிற்பது ஆன்மாவின் செயற்கை அறிவுநிலை எனவும், கருவிகள் நீங்கின இடம் இயற்கை அறிவுநிலை எனவும் சொல்லப்படும்.

இனி, அவத்தைகள்பற்றி ஆசிரியர் கூறுமிடத்தே ஏனைய விரிவுகள் தரப்படும்.

இதனால் நாம் அறியக்கிடப்பது, கருவிகள் எல்லாம் நீங்கி ஆணவமலம் ஒன்றும் நீங்காத ஏகாந்தமான அதீதாவத்தையே ஆன்மாவுக்குப் பெத்தநிலைக்குரிய உண்மை. இவ்வாறு ஆகமங்கள் எடுத்துரைத்தலின் 'என உணர்த்தும்' எனப்பட்டது என்க!

இனி இச்செய்யுளால் நாம், (1) ஆன்மாவானது சரீரங்களோடு கூடிவாழும், (2) அப்போது இந்திரியங் களுடன் கூடிநின்று அறியும், (3) அறிகருவிகள் கூடியும் கூடாமல் விட்டுநீங்கியும் அவத்தையுறும், (4) அதீதத்தில் மலமறைப்புண்டு மூலாதாரத்தில் அந் தப்புரத்தில் அடங்கும் அரசன் போன்று தனித்திடும் என்கிற விஷயங்களை அறியலாகும்.

## 3. ஆன்மசாதனம் உணர்த்துகை

*உருஉணர்(வு) இலாமை யானும்,*
*ஒரொரு புலன்க ளாக*
*மருவிநின்(று) அறித லானும்,*
*மனுதிகள் தம்மின் மன்னித்*
*தருபயன் நுகர்த லானும்,*
*உயிர்சடம் ஆதலானும்,*
*அருவினை உடலுள் ஆவி*
*அறிவினுல் அறியும் அன்றே.*

### பொழிப்புரை

உடம்பானது அவத்தையிலும் மரித்தபோதிலும் உணர்ச்சி இல்லாத சடம் ஆகையாலும்; செவி முதலன ஐந்தும் தத்தமக்கு ஆதாரமாகிய பூதங்களைப் பொருந்திநின்று ஒவ்வொரு விடயங்களாக ஐந்தையும் அறிகையாலும்; (அல்லது) —

சோத்திராதிகள் ஐந்தையும் பொருந்தி நின்று ஒருவன் அறிகையாலும் - அந்தக்கரணங்கள் தங்களிற் கூடிப்பற்றி, நிச்சயித்து, அகங்கரித்து, சிந்தித்து இந்திரியங்கள் தந்த விடயங்களைப் புசிக்கையாலும்; (அல்லது) —

இந்திரியங்களைப் பொருந்தி ஒவ்வொரு விடயங்களைப்பற்றி நிச்சயித்து அகங்கரித்துச் சிந்திக்கையின் அவை ஒன்றறிந்து ஒன்று அறியா ஆதலின் அவை நாலினும் ஆன்மாப் பொருந்தி அவற்றினுல் அந்தப் பயனைப் புசிக்கையாலும்;—

பிராணவாயு அவத்தையை அறியாதிருத்தலாலும்; நீங்குதற்கு அரிய வினைக்கு ஈடாக எடுத்த

*தேகத்திலே ஆன்மாவானது (சிவன் கூட்டியருளின) கலாஞானத்தாலே அறியும்.*

*இது, தேகமே ஆன்மா எனவும், இந்திரியம் ஆன்மா எனவும், அந்தக்கரணம் ஆன்மா எனவும், பிராணவாயு ஆன்மா எனவும் கூறுகின்ற உலகாய தன் - புத்தன் - கன்மயோகி - ஆகிய இவர்களை நிரா கரித்துத் தேகத்துக்கு வேறதாக ஆன்மா உண்டு என உணர்த்தும் குறிப்புடையதாம்.*

## விளக்கவுரை

மேற்செய்யுளில் பொதுப்பட ஆன்ம இலக்கணம் கூறப்பட்டது. அதுகொண்டு ஆன்மா அறிவாம் தன்மைத்து எனத் தெரிந்தோம். இங்கு இச்செய்யுளில் உடம்போடு கூடியல்லது ஆன்மா எதையும் அறிய மாட்டாமையால் உடம்பே ஆன்மாஎன்னும் உலகாய தர்கொள்கை தவறு எனவும், புலன்களைக்கொண்டே ஆன்மா ஐயறிவு கொள்வதனுல் புலன்களே ஆன்மா என்னும் புத்தர்கொள்கை தவறு எனவும், அந்தக்கர ணங்களாலும், பிராணவாயுவாலுமே ஆன்மா அறி கின்றதாதலால் ஆன்மா அந்தக்கரணமேயாகும் என வும், பிராணவாயுவேயாகும் எனவும்கூறுகின்ற கன்ம யோகிகள் கொள்கை தவறு எனவும் ஆசிரியர் எடுத் துக்காட்டலுறுகின்ருரரவர், அவையிற்றை இனி ஒவ் வொன்ருகக் காண்போம்.

உரு உணர்வு இலாமையானும்:

மக்களிற்பலர், உடம்பே எல்லாம்செய்வதுபோலக் காணப்படுவதால் உடம்பையே ஆன்மா என்றும், ஆன்மா என்பது வேருென்றன்று என்றும் காட்சிப்

பிரமாணம் காட்டி வாதிப்பர். இவர்கள் கண்ணுல் காணப்படும் உருவு = உடம்பையும், உலகத்தையுமே உள்பொருளாக ஏற்பர். இதுபற்றியகருத்தினைச் சித்தியார் - பரபக்கத்தே உள்ள "ஈண்டு அளவை காட்சி" எனத்தொடங்கும் பாடலாலும் உரையாலும் தெரியலாம். மற்றும் இவ்வாதினைத்து "உண்டா இல்லையா?" என்னும் பெயருடைய 209-ஆவது வெளியீட்டாலும் விரிவாக அரியலாம்.

தேகான்மவாதிகள், அறிவு என்பது உடம்பினிடத்தே நிகழ்கின்றது; உடம்பை விட்டால் நிகழக் காணேம்; மேலும், நான் இளைத்தேன்; பருத்தேன் என்று உடம்பையேகூறுகிறேம். ஆதலால், உடம்பே ஆன்மா என்பதே உண்மை என்கின்றனர். இவர்களை மறுத்து உண்மை உணர்த்துவது இவ்வரி. பிரமாண இயல் மூன்றும்சூத்திரம் இரண்டாம் அதிகரணத்திலே, உடம்பு ஆன்மா அன்று எனக்கூறும் மேற்கோள், 'இனி எனதுஉடல் என்றலின் ஆன்மா உளது' எனக் கூறுதல் காணற்பாலது. நான் பருத்தேன், சிறுத்தேன், கரியேன், மானிடன், அந்தணன் என்றெல்லாம் கூறும்போது உடம்பின் குணச்சிறப்புக்களை உபசாரத்தால் உயிருக்கு ஏற்றிக் கூறுகிறேம் எனக் கொள்ளவேண்டும். இப்படிக்கூறினும் யான்உடம்பு, யான்கை, யான்கால் எனத் தற்கிழமைப்பொருளில் எவரும் சொல்வதிலர். எனது உடம்பு, எனது கால் என்றெல்லாம் பேசுகின்றனர். அப்போது உடம்பை வேருகவைத்துக் கூறுவதால் உடம்பின்வேருக உயிர் உண்டு என்று தெரியலாம். அல்லாமலும் இராகுவினதுதலை என்பதுபோன்ற வழக்கு (ஒற்றுமைக் கிழமைக்கூற்று) பெருவாரியாகச் சொல்லப்படுவதன்று.

என்மனைவி என்வீடு என்னும்போது தன்னின்வேறான பொருளைத்தான் 'என்' என்னும் சொல் குறிக்கிறது. ஆதலால் என்உடல் என்னும்போதும் ஆன்மாவேறு உடல்வேறு என்பது தெரியப்படுகின்றது.

வீடு இடிந்தால் நான் இடிந்தேன் என்று எவரும் கூறார். மனைவி மாண்டால் நான் மாண்டேன் என்று யாவரும் கூறார். எனவே தொழில்களைப்பற்றிப் பேசும் போதும் உடலின்வேறாய் ஆன்மா உண்டு என்பது குறிக்கப்படுதல் காணலாம். உடம்பு வேறு, ஆன்மா வேறு என்பது மெய்யோ பொய்யோ என்பது ஐயப் பாடு. உடம்பே ஆன்மா என்பது தேகான்மவாதிக ளின் போலிக்கூற்று. உடம்பு வேறு என எது அறி கிறதோ அதுவே உடம்பின்வேறாய ஆன்மா. உடம்பு அங்ஙனம் அறியுந்திறன் உடையதன்று என்பது மெய். இப்படிச் சாதிப்பினும் உடம்பே அறியும் என்பார் உளர். அவ்வாறாயின், உடம்பு பிணமாய்க் கிடந்த போதும் உணர்வுநிகழவேண்டும். அப்படி நிகழவில்லை. ஆகையால் உணர்வற்ற உடல் வேறு; உணர்வுள்ள ஆன்மா வேறு எனத்தெரிதல்கூடும்.

பிராணவாயு உடம்பைவிட்டு நீங்கிவிட்டபடியால் உணர்வு நிகழவில்லை. ஆதலால் உடம்பின் வேறாய் உயிர் உண்டுஎன்பது பொருந்தாதென்பர் உலகாயதர். அப்படியானால் அயர்ந்து தூங்கும்போது பிராணவாயு இயங்கியும் உடம்பு உணரக்காண்கிலோம். ஆதலால், எவ்வாற்றானும் சடமாம் உடம்பு அறிவதில்லை எனத் தெரிதலே உண்மையாம். இக்கருத்துக்களை, "உடலின் வேறு உயிரேன்" எனக்கூறும் சித்தியார்ப்பாடலால் தெரிதல் நன்றாம். இவ்விஷயமே இங்கு 'உரு உணர்வு

இலாமையானும்' எனப்பட்டதென்க! இக்கருத்தின் மேற்கோளாகச் சித்தியார்ப் பரபக்கநூலிலே "அறிவு பூதம் அது என்னில்" என்னும் பாடலையும் கொள்ளல் தக்கதாகும். 'அவத்தை' என்பது சுழுத்திநிலையில் வைத்துரைக்கப்பட்டமை காணலாம்.

ஓர் ஒரு புலன்களாக மருவிநின்று அறிதலானும் :

உடலின்வேறாக ஆன்மா உண்டு எனவும், அதுவே அறிதல் புரிகின்றதெனவும் இதன் முன்னர்க் கூறப்பட்டது. இப்போது, இந்திரியங்களே ஆன்மாஎன்று கூறும் இந்திரியான்மவாதிகளை இவ்வரியில் மறுத்துரைக்கின்றார் ஆசிரியர்.

ஐம்புலன்கள் என்பன சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனப்படுவனவாம். ஐம்பொறிகளாவன மெய் - வாய் - கண் - மூக்கு - செவி என்பனவாகும். பொறிவாயிலாகப் புலன்கள் புறவிஷயங்களை அறிதல் செய்யும் என்பர் யாவரும். எனவே, புலன்கள் அறியும் திறமுடையன என்றேற்படுகின்றது. அவை உடல் போல் சடமல்ல. அவைகளை எனது என்று பெரும்பாலும் வழங்குவது இல்லை. இவைகளையெல்லாம் கொண்டு இந்திரியங்களே ஆன்மா என இந்திரியான்மவாதிகள் புகல்வர். உலகாயதர்களில் ஒருசாரார் இவ்வாறுனவர்கள். சப்தம், பரிசம், ரூபம், இரதம், கந்தம் என்னும் ஐந்து விஷயங்களையும் செவி முதலான ஐந்து இந்திரியங்களே அறிகின்றன. ஆதலால் அவை சடமல்ல. மேலும் செவி முதலியவற்றின் தொழில்களை, என் செவி கேட்டது, என் கண் கண்டது என்று சிறுபான்மையே வழங்கப்படும். நான் கேட்டேன், நான் கண்டேன் என்பதே பெருவழக்கு.

ஆகையால் இந்திரியங்களே ஆன்மா என்றல் தவறன்றென்பர் இந்திரியான்மவாதிகள்.

ஐந்து விடயங்களையும் அறிகின்றது என்பது அனுபவத்திற்கண்டதே. ஆனால் ஒவ்வோர் இந்திரியமும் ஒவ்வோர் விடயத்தையே அறிகின்றமை கண்கூடு. ஆதலால், மெய்கண்டதேவர், "ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையால் இந்த ஐந்தினாலும் ஐந்துபயனையும் அறிவதொரு பொருள் உள்ளது. அதுவே ஆன்மா ஆகும்" என்று எடுத்துரைத்துள்ளார். செவியானது சப்தத்தை அறியும். ஆனால் ரூபத்தை அறியாது கண்ணானது உருவத்தை அறியும். ஆனால் சப்தம் முதலியவற்றை அறியாது. இது யாவரும் உடன்படும் செய்தியே. ஆனால் நான் சப்தத்தை அறிந்தேன் முதலவாக ஐந்தையும் ஒரு சேர அறியும் ஒன்றன் அனுபவம் யாவர்க்கும் உள்ளது. ஆகவே, ஐந்து இந்திரியங்களையும்கொண்டு ஐந்து பயனையும் அறிவது ஒன்று உண்டு என்பது பெறப்படுகின்றது. அதுவே ஆன்மா. இப்போது ஆன்மாவின் அறிவுத்திறம் புலனாகின்றதன்றோ! இதனால் ஐந்து விஷயங்களையும் அறியவல்லது ஆன்மா எனத் தடை இன்றாம்.

இந்திரியங்கள், தாமாக ஒவ்வொரு விடயத்தையும் அறியும் திறனுடையன அல்ல. சூக்கும பஞ்சாக்கரம் செலுத்த அறியும். கண் பார்த்தறிந்தது, செவி கேட்டு அறிந்தது என்று உணரும் பொருள் இந்திரியங்களின் வேறாகவே உள்ளது. அதுவே ஐந்தையும் அறிந்து ஐந்து பயனையும் கொள்வது. ஓர் இந்திரியம் அறிந்ததை வேறோரிந்திரியம் அறியமாட்டாமையால் அறியாமை இந்திரியங்கட்குளதென்னத் தடை இலதாம்.

சாக்கிர அவத்தையிலிருந்துகொண்டே, உடல் அறியா இயல்பினது; இந்திரியம் அறியா இயல்புடையது என்று யாவராலும் ஒப்புக்கொள்ளப்படும் என்பது ஒருதலை. புத்தரில் ஒருசாராராகிய மாத்தியமிகளும் இந்திரியங் களை ஆன்மா என்னும் கருத்துடையராவர். இந்திரி யங்களும், அந்தக்கரணங்களும் இருக்கின்றபோதும் ஆன்ம அறிவு அவற்றோடு கூடாது பராக்காயிருப்பின் புலன்களும் கரணங்களும் ஒருபொருளைத் துணிந்து அறியமுடிவதில்லை. ஆன்ம அறிவு இவற்றோடு பொருந் துகின்றபோதுதான் அறிவு உண்டாகிறது. ஆகவே பொருளை அறியும் - துணியும் அறிவுடையது ஆன்மா வேயாம் என்பது உறுதியாகும்.

மேலும், நனவிலே ஐம்பொறிகள் உடம்பில்நின்று அறியினும் உறக்கத்திலே அறிதலில்லை. நனவிலும் ஒவ்வொரு பொருளாகவே அறியமுடிகின்றதேயன்றி ஒருசேர அறியமுடியவில்லை. ஓர் இந்திரியம் ஒன்றை அறியும்போது இன்னோரிந்திரியம் இன்னொருபொருளை அறிய முடிவதில்லை. இப்படியெல்லாம் அறிதலில் இந்திரியங்கட்குப் பலவீனம் இருத்தல் நன்கு தெரிவத னால் ஐந்தன் துணைகொண்டு ஐந்தையும் அறியும் ஆற் றலதே ஆன்மா என்பது தேற்றமாம். "அறிவதைம் பொறியே என்னில்" என்னும் சித்தியார்ப் பாடல் இங்குப் படித்தறிதல் நன்றாம்.

ஐம்பொறிகள் ஒவ்வொன்றையே அறியும். ஒன்றை யொன்று அறியமாட்டா. தாமாக அறியவும் மாட்டா. ஆதலின் ஒருசேர அறியுந்திறம் உடையது ஆன்மா என்பது இவ்வரியின் கருத்தாம் என்க. 'ஓர் ஒருபுலன் களாக மருவிநின்று அறிதலானும்' என்னுமிடத்தே இக் கருத்துக்கள் இருப்பனவாம்.

மஞ்ஞதிகள் தம்மின் மன்னி தரு பயன் நுகர்தலானும்:

இந்திரியங்கள் அறிவுடையன ஆகா. ஆன்மாவே ஐந்து இந்திரியங்களின் மூலமாக ஐந்து விஷயங்களையும் அறிகின்றது. ஆதலால் அறிவுடைய பொருள் ஆன்மா எனப்பட்டது. இப்போது அந்தக்கரணங்களே அறிவுடையன. அவைகளே இந்திரிய விஷயங்களைப் பற்றியும், நிச்சயித்தும், அகங்கரித்தும், சிந்தித்தும் புசிக்கின்றன. ஆதலால் அந்தக்கரணங்களே ஆன்மா எனப்படுவது எனப் புத்தர் சமயத்தவரின் சிலரும் கன்மயோகியரும் கூறுவர். இவர்கள் கூற்றும் சரியானதன்று என இந்த வாக்கியம் எடுத்துரைக்கப் புகுகின்றதாகும். அந்தக்கரணங்கள் இல்லையானால் பொருளும் இராது. அதாவது இன்னது இன்ன பொருள் என அறிய முடியாது. பொருள் இல்லையாயின் அறிவும் இல்லையாக முடியும். இப்படி வாதிப்பர் அந்தக்கரணான்ம வாதிகள். இதன் மறுப்பு வருமாறு:—

மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்கிற நான்கும் அந்தக்கரணங்களாம். அந்தக்கரணங்கள் இந்திரியங்களை வாயிலாகக் கொண்டு அவை சித்துப் போல் காணப்படினும் அசித்தே. "அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்" என்பது சிவஞானபோத நூலின் மேற்கோள் கூற்றும். அறிகின்றபோது சித்தம் ஒருபொருளைப் பிண்டமாகச் சிந்திக்கும். மனம் சங்கற்பித்தும் விகற்பித்தும் அறியும். அகங்காரம் நான் நிச்சயிப்பேன் என எழும். புத்தி இன்னதுதான் என நிச்சயிக்கும். இவ்வாறு கூறுவது சிவஞானபோதச் சிற்றுரை.

மேற்கூறப்பட்ட சித்தம் முதலியவைகள் தாம் முறையே சிந்தித்ததாகவும், சங்கற்பித்ததாகவும், அகங் கரிப்பதாகவும், நிச்சயிப்பதாகவும் அறியும் வன்மை உடையன அல்ல. ஆன்மாவே விடயங்களை உணர்வ தற்கு இந்திரியங்களை வாயிலாகக் கொண்டதுபோல அந்தக்கரணங்களைக் கருவியாகக்கொண்டு அறியும் திறத்தது. அந்தக்கரணங்கள் வெற்றுக்கருவியே ஆத லால் அவை அறிவுடையன ஆகமாட்டா. அந்தக்கர ணங்களை ஒரொருகால் சித்து எனக் கூறுவராயின் அஃது உபசரணையே ஆம். ஆன்மா, அந்தக்கரணங்க ளுடன் கூடாதபோது அந்தக்கரணங்கள் சிந்தித்தல் முதலான தொழில்களைச்சிந்திக்கும் இயல்பு பெற்றில்லை யாதலால் ஆன்மாவே அவற்றோடுங் கூடி, சிந்தித்தேன்- பற்றினேன் - அகங்கரித்தேன் - நிச்சயித்தேன் என அறியும். இப்படி ஆன்மா அறிந்தபின்னரேதான் குணங்கள் மூன்றற்கு ஏற்றாற்போல் சுக துக்க மோக ரூபமாகக் கலாதிகளுடன்கூடி ஆன்மாவாகிய தான் தானே அறிகின்றது. கருவிகளைச் செலுத்துவதனால் கருவிகளினும் சித்தாயிருப்பது ஆன்மாவாம். நான் அறிந்தேன் என உணர்வதனால் தன்னை நோக்கியும் சித்தாயிருப்பது ஆன்மாவேயாம். ஆதலால் முற்றிலும் அறிதிறனுடைய ஆன்மாவை அந்தக்கரணங்களிலே சேர்த்துக் கூறுதல் பொருத்தம் ஆகாது என்பது வெளிப்படை.

சித்தியாரில் நான்கும் ஆன்மாவே என்று கூறப் படுதல் கொண்டு மயங்க வேண்டுவதில்லை. அந்தக் கரணங்கள் நான்கும் ஆன்மாவோடு ஒன்றுபட்டு நிற்ற லால் கருத்தா என்று சொல்லும்படி நிகழும். ஆயினும் கருத்தா அன்று. அரசனுடன் நெருங்கி

யிருப்பதால் அமைச்சனையும் அரசனென உபசரித்துக் கூறுவர். இதனால் அமைச்சன் அரசனாகிவிட மாட்டான். இப்படித்தான் உள்ளது அந்தக்கரண - ஆன்மாக்களின் விஷயம். அந்தக்கரணங்களுக்கு வேறு வேறு பெயர் வழங்கப்படுகின்றது. ஆன்மா என்ற ஒரே பெயரால் வழங்கப்படுவதில்லை. அந்தக்கரணங்களில் ஒன்று அறிவதை இன்னொன்று அறியாது. இதுவும் அந்தக்கரணங்கள் அறிவுடையன அல்ல என்பதை நிரூபிக்கும். இங்குக் "கருவியாம் மனம்" என்னும் சித்தியார்ச் செய்யுட் பொருளையும், "மனமாதியால் உணர்தல்"; "சிந்தித்தாய்ச் சித்தம் தெளியாதாய்" என்னும் சிவஞானபோத உதாரண வெண்பாக்களின் பொருள்களையும் அறிதல் நன்றாம். அந்தக்கரணங்களின் தொழிலை ஆன்மா அறிதற்கு ஆன்மாவின் அறிவை உடலில் நின்று அந்தக்கரணங்களை ஊக்கும் அக்கரங்கள் உள என்றும் கூறுவர். இதனாலும் அந்தக்கரணங்கட்குத் தாமே அறிவில்லை என்பது தெரியப்படும். எனவே, மனம் முதலான அந்தக்கரணங்கள் உட்கருவிகளே அல்லாமல் தாமே அறிவன ஆகா என்பதை 'மனாதிகள் தம்மின் மன்னி' என்ற தொடர் தெரிவிக்கின்றது.

அப்படி மன்னுவது ஆன்மா ஆகும். அதுவே குண பேதங்கட்கேற்பச் சுக துக்க மோகரூபங்களான பயனை நுகர்வதுமாகும். இதனைத் 'தரு பயன் நுகர்தலானும்' என்ற தொடர் தெரிவிக்கும். ஆன்மாப் புருட தத்துவ ரூபமாய் நின்று இங்ஙனம் அறியும், அனுபவிக்கும் என்பது சாத்திரம். இப்பகுதியைத் திருவாசகத்தில் உள்ள — "சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரில் ஐம்புலன்களால் முந்தையான காலம்"

"இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய் - அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வதற்குச் - சிந்தைதனைத் தெளிவித்து" என்னும்வரிகளுடன் ஒப்பு நோக்கி ஆய்தலாலும் அறிதல்கூடும்.

உயிர் சடம் ஆதலானும் :

உயிர்=பிராண வாயு; பிராண வாயுவே ஆன்மா எனக் கொண்டு அப்பிராணவாயுவே அறிவுடையது என்று கூறுபவர்களும் உளர். ஆன்மா என்னும் பெயர் வேறாகவும் பிராணன் என்னும் பெயர் வேறாக வும் வெவ்வேறு பொருள்களுக்கு வழங்கப்படுதலை நாம் அறிவோம். என்றாலும் பிராணான்மவாதிகள், சொப்பனம் - சுழுத்தி - துரியங்களிலும் பிராண வாயு இயங்கிக்கொண்டேயுள்ளது; அந்தப் பிராண வாயுவா னது, ஐம்புலன்களை அடக்கிக்கொண்டு சொப்பனத் தானத்திலிருந்தும் - அந்த ஐம்பொறிகளை வெளிப் படுத்திக்கொண்டு சாக்கிரத்தானத்திற்கு வந்தும் விஷ யங்களை அறிதலின் அதுவே ஆன்மா என்பர். ஆனால், ஆய்ந்துபார்ப்பின், சுழுத்தியாகிய நித்திரைப்போதில் பிராணவாயு இயங்கிக்கொண்டிருந்தாலும், விஷயங் களின் வழியாய் வரும் இன்ப துன்ப அனுபவமும், உடம்பு தொழிற்படுதலும் இல்லை; இன்ப துன்ப அனு பவத்தையும் உடம்பின்தொழிற்பாட்டையுமுடையது பிராணவாயுவன்று. இந்த இரண்டையும் உடையது பிராணவாயுவின் வேறான ஆன்மாவே ஆதல்வேண்டும் என்பது தெளிவாம்.

சிவஞான போதத்தில் மூன்றாம் சூத்திரத்து ஐந்தாம் அதிகரணத்து மேற்கோளில் பிராணவாயு ஆன்மா அன்று என மறுக்குமிடத்தே "உண்டியும்

வினையும் இல்லாமையினாலே'' எனக் காரணங்காட்டப் பட்டுள்ளது. உண்டி என்பது விஷயங்களினிடமாக வரும் இன்ப துன்ப அனுபவமாகும். வினையென்பது பிராணனின் இயக்கத்தை அன்று; ஆனால் உடம்பு தொழிற்படுதலை ஆகும். பிராணவாயு நீங்கிய ஏனைய கருவிகள் ஒடுங்கிய சுழுத்தியில் பிராணவாயு இயங்கிய போதிலும் உண்டியும் வினையும் உடம்பினிடம் நிகழ்வ தில்லை. ஏனைய கருவிகள் ஒடுங்காத சாக்கிரத்தில் அவ்விரண்டும் நிகழ்கின்றன. சாக்கிரத்திலும் சுழுத்தி யிலும் பிராண வாயுவானது ஒரே மாதிரி இயங்கிக் கொண்டிருந்தாலும் உண்டி வினை நுகர்ச்சியில் வேறு பாடிருப்பதனால், சுழுத்தியில் கருவிகளை ஒடுக்கியும், சாக்கிரத்தில் கருவிகளை ஒடுக்காமலும் பிராணவாயு அல்லாத ஏதோ வேறொன்று செய்கிறது. அதுதான் ஆன்மா. இக்கருத்தினைச் சிவஞான போதத்தில் ''கண்டறியும் இவ்வுடலே'' எனத் தொடங்கும் உதாரண வெண்பா உரையால் தெரியலாம். பிராண வாயுவானது அறியுங்கருத்தா அன்று. அது கருத்தா வாயின் அஃது இயங்கும்போது கருவிகள் ஒடுங்கக் காரணம் இல்லையாம். ''அறிந்திடும் பிராண வாயு அடங்குதல் விடுதல் செய்தால்'' என்னும் சித்தியார்ப் பாடலுரையும் இங்குப் பார்த்தறிதல் பயனுடைத்தாம். இதனால் பிராணவாயுவும் சடமே என்பது கருத்தாம் என்க.

அருவினை உடலுள் ஆவி அறிவினால்
அறியும் அன்றே :

மேலே தரப்பட்ட நான்கு விதமான காரணங் களாலும் தேகமும், இந்திரியமும், அந்தக்கரணமும்,

பிராணனும் ஆன்மாவாகமாட்டா எனவும், அவை அறிவில்லாத சடக் கருவிகளே எனவும் நிரூபிக்கப் பட்டன.

உடம்பு அவரவர் வினைக்கேற்பவே அமைக்கப் படுகின்றது. நம் விருப்பப்படி அமைவுறுதல் இல்லை. அந்த வினை அருவமாயிருந்து இப்படி அமைப்புறச் செய்யக் காரணமாகிறது. "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது" என இலக்கியமும் இசைக்கின்றது. ஆதலால் இங்கு ஆசிரியர், 'அருவினை உடலுள் ஆவி' என்றார். ஆன்மா, தனக்கு வினைவயத்தால் ஏற்பட்ட உடம்பினுள் வினை உலக்குமளவும் தங்கி வாழ்கின்றது. யாதேனும் ஒன்றைச் சார்ந்து வாழ்வதே உயிர்க்கு இயல்பு. உடலைச் சார்ந்து உறையும் ஆவியானது முற்றிலும் திருவருளைச் சார்ந்திடுமாயின் முத்திநிலை யுற்றிடும். வெறுங்காற்றையே உயிரெனக் கருதுபவர் பெரும்பான்மையராக இருத்தலின் 'ஆவி' என்றார். ஆன்மாத்தான் விஷயங்களை அறிகின்றது என்பது 'ஆவி ... அறியும்' என்பதனால் பெறப்படும். என்று லும் வினைக்கேற்ப உடலமைத்துக் கொள்வதிலும், விஷயங்களை அறிவதிலும் ஆன்மா தான் சுதந்தரம் உடைத்தாயிருக்கவில்லை. அறிவிக்க அறிவதே ஆன்ம இயல்பாக உள்ளது. ஆதலின் ஆசிரியர் வாளா 'அறியும்' என்னாமல் 'அறிவினால் அறியும்' என் றுள்ளார். இங்கு 'அறிவினால்' என்பது, சிவம் அறிவிக்கும் தன்மையினால் என்னும் குறிப்புடைய தாகும். அதாவது, கலா ஞானத்தின் துணையினால் என்பது கருத்தாம்.

குருடனுக்குப் பார்வையுடையான் கோலால் வழிகாட்டி அறிவுறுத்தல் போன்று மலமறைப்புற்று

மயக்கமும் உற்றுள்ள ஆன்மாவுக்குக் கருவிகளால் சிவம் அறிவிக்க ஆன்மா அறிகின்றமையால் 'அறிவி ணுல் அறியும் அன்றே' என உரைக்கப் பட்டது. இதனுல் தடத்தத்தே ஆன்மா அறியும் முறைமை உணர்த்தப்பட்டிருத்தல் தெரியலாம். "தனித் துணை நீ நிற்க யான் தருக்கித் தலையால் நடந்த — வினைத் துணையேனை" என்னும் திருவாசக வரியின் பொருளும் இங்குப் பொருத்திப் பார்த்தல் நன்ரும். 'அறியும்' என்றமையால் ஆன்மாவுக்கு அறியும் அறிவு உள்ள தென்பது விளங்கும்.

இதுவரை சொல்லியவை கொண்டு, ஆன்மா என்பது ஒன்று கருவிகளின் வேருக உள்ளது; அது சிவம் அறிவிக்க அறிந்து இவ்வுடலிலே நின்று வாழ்வது எனவும், உலகாயதர் முதலானவர்களுடைய மாறு பட்ட கருத்துக்கள் எவ்வெவ்வாறு தக்க காரணங் காட்டி மறுக்கப்பட்டுள்ளன எனவும் நாம் அறிய லாகும் என்க!

## 4. முன்பே ஆன்மாவுக்கு அறிவு உண்டென்பது

(அறிவிக்க அறிவது ஆன்மா)

*அறிவெனில் வாயில் வேண்டா;*
*அன்றெனில் அவைதாம் என்னே?*
*அறிவவை உதவும் என்னில்,*
*அசேதனம் அவைதாம்; எல்லாம்*
*அறிபவன் அறியும் தன்மை*
*அருளுவன் என்னில் ஆன்மா*
*அறிவிலா தாகும்; ஈசன்*
*அசேதனத்(து) அளித்திடானே.*

## பொழிப்புரை

*வேறோர் அறிவினால் அறியும் என்றது என்னே? ஆன்மாத் தானே எவற்றையும் அறியும் அறிவு காணும் என்னும் சாங்கியனும் அயிக்கிய வாதியும் சொல்லில் இந்திரியங்கள் வேண்டாவாய் முடியும்.*

*ஆன்மா அறிவுடையது அன்று என்று நியாய வைசேடிகர் சொல்லில் அறிவில்லாத ஆன்மாவுக்குக் கருவிகள் எற்றுக்கு?*

*இந்திரியங்கள் ஆன்மாவுக்கு அறியும் முறைமையைக்கொடுக்கும் என்று சங்கிராந்தவாதி சொல்லில், அவை சடம் ஆதலின் கொடுக்கமாட்டாது.*

*முற்றுணர்வினனாகிய பரமசிவன் கருவிகளாலே ஆன்மாவுக்கு அறியும் முறைமையைக் கொடுப்பன் என்று பரிணாமவாதி சொல்லில், அப்போது ஆன்மாச் சடமாக வேண்டும்; ஆதலாலே,*

*பரமசிவன் சடத்துக்கு அறிவைக் கொடான்.*

## விளக்கவுரை

**அறிவு எனில் வாயில் வேண்டா:**

உடம்பில் உறையும் ஆன்மாவுக்கு அறிவு உண்டு. அந்தத் தன்மை உடையதாக ஆன்மா இலதாயின் அது சடப்பொருள்களோடு சேர்க்கப்படும். சடம் எதையும் அறியாது. எதையும் அறியாத சடமாக உடம்பும் ஆன்மாவும் இருக்குமானால் சிற்றறிவு சுட்டறிவு முதலிய பேச்சுக்கே இடம் இல்லையாய் பிறப்புப் பயனற்றதாய் முடியும். ஆகவே ஆன்மா,

சித்துப் பொருளாம் என்னவேண்டும். இவ்வாறு சொல்லப்படுவதை இந்த வாக்கியம் மறுக்கின்றது. ஆன்மா அறிவுடைப் பொருளாயின் அதற்குக் கருவிகளின் துணை வேண்டுவதில்லையே. கருவிகளோடு கூடியவழி ஆன்மா அறிகிறது. நீங்கியவழி அறிவதில்லை என்று தெரிவதனால், கருவிகளே அறிவிப்பவை ஆகும். ஆதலால் ஆன்மா அறிவுடையதன்று என மறுப்பர். வாயில் = கருவிகள். இதனால் தற்சுதந்தரமாய் அறியும் பொருளன்று ஆன்மா என்பது கருத்தாம். ஆன்மாவுக்கு அறிவில்லை என்பது சங்கிராந்த வாதியர் கருத்தாம்.

வாயில்கள் ஒன்றன் அறிதொழிலைப் பிறிதொன்று செய்வதில்லை. ஒன்றையொன்று அறிவதுமில்லை. அறிவுடைய ஆன்மாவின் சந்நிதியிலேதான் கருவிகள் தொழிற்படுகின்றன; தத்தம் இயல்புக்கேற்ப அறிகின்றன. ஆதலால் அவற்றிற்குச் சொந்தமாக அறிவு இல்லை என நாம் அறியலாகும். தச்சன் வேலையில் திறமைசாலியாக இருந்தாலும், கருவிகளைக்கொண்டே தன் வேலைகளைச் செய்கின்றான். கருவிகள் நேரே வேலைக்குப் பயன்படுவன போலக் காணப்படினும், அக்கருவிகள் அறிவுடையன ஆகமாட்டா. உண்மையில் தச்சனுடைய அறிவே, வேலைப்பாடு உடைய பொருள்களைச் சமைத்துப் பயன்துய்க்க உதவுகின்றதாகும். ஆகையால், 'அறிவு எனில் வாயில் வேண்டா' என்ற கருத்துப் பிழைபாடுடையதாகும். அறிவு ஆன்மாவுக்கு இருப்பினும் வாயில் வேண்டும் என நாம் எளிதில் உணரலாம். இங்ஙனமன்றி, ஆன்மாச் சிவத்தின் அறிவிப்பினால்தான் அறிகிறது என்றால், இந்திரியம் முதலான கருவிகள் வேண்டுவ

தில்லை என்று சாங்கியரும் ஐக்கியவாதியரும் கூறுவர். சிவம் அறிவிக்க ஆன்மா அறிவதாயினும், அவ்வறிவு தொழிற்படுவதற்கு இந்திரியம் முதலான கருவிகள் தேவைப்படுவனவே என்பது தெரியலாம்.

அன்று எனின் அவைதாம் என்னை ?

இனி நியாய வைசேடிகராவார் ஆன்மாவுக்குச் சொந்தமாக அறிவில்லை; ஆதலால் கருவிகளின் துணை தேவைப்படுகின்றது என்பர். இவர்கள் கூற்றும் கொள்ளத்தக்கது அன்று. ஏனெனில் ஆன்மா அறிவு உடைய பொருள்அன்று எனக்கொண்டால் அது சடப்பொருள் என்று ஏற்படும். சடப்பொருளுக்குத் தான் அறிவு கிடையாது. இந்திரியம் முதலன சடப் பொருள்கள் என்பது யாவரும் தெரிந்த செய்தியே. அப்படி இந்திரியங்கள் சடப்பொருளாக இருப்பதனால் தான், அவை தாமாக ஒரு தொழிலையும் செய்ய முடிவதில்லை. ஆன்மாவும் சடமாக இருந்தால் அதுவும் எந்தத் தொழிலையும் செய்யாது. இப்படி ஆன்மாவும் சடப்பொருளாய் அறிவிக்க அறியும் தன்மை இல்லாததாயின் இந்திரியங்கள் அதற்குப் பயன்படமாட்டா. அப்படிப் பயன்படமாட்டாவா யின் அந்தக் கருவிகள் எற்றுக்கு ? இதுபற்றியே, ஆன்மா அறிவுடையது 'அன்று எனின் அவை தாம் என்னை' எனப்பட்டது. இதனால் ஆன்மா அறிவுடைய பொருள்தான் என்று ஏற்படும்.

ஏதொன்றை அறிவதற்கும் இந்திரியங்களின் துணை ஆன்மாவுக்கு வேண்டியுள்ளமையே ஆன்மா வுக்கு அறிவில்லை என்பதைப் புலப்படுத்தும் என வாதித்தல் சரியன்று. கைகளால் ஒரு பொருளின்

இருப்பைக் குருடன் ஒருவன் தடவி அறிவானுயின் அவனுக்குக் கண்கள் இல்லை என்னலாம். பார்த்த மாத்திரத்தே பொருளின் பெயரை அவன் கூறவல்லானுயின் அவனைக் குருடன் என எவரும் கூருர்; கண்ணறிவுடையவன் என்றே சொல்வர். இப்படித் தான் ஆன்மாவும் தன்னறிவுடையதாய் இந்திரியங் களைக்கொண்டு விஷயங்களைத் தெரிகிறது. ஆகையால் ஆன்மா அறிவுடையபொருள் என்று கூறத் தடை இல்லையாம் என்க. "அறிவு எனில் வாயில் பொறி புலன் என்னை?" என்று சங்கற்ப நிராகரணத்தே தரப்பட்டுள்ள வரி இங்குள்ள வாக்கியத்துக்கு ஏற்ப இருத்தல் காணலாம். மற்றும் ஈசுவர அவிகாரவாதி நிராகரணத்தே கூறப்படும் செய்திகளையும் ஈங்குப் படித்துப்பார்த்தல் பயன் உடைத்தாம்.

**அறிவு அவை உதவும் என்னில்,**
**அவைதாம் அசேதனம் :**

ஆன்மாவின் விஷய அனுபவத்துக்கு—விஷயக் காட்சிக்கு—பாசஞானம் எனப்படுமதாகிய இந்திரி யங்களே மயக்கமில்லாமல் அறிவிக்கின்றன. இந்த அறிவிப்பின் துணையில்லாவிடில் ஆன்மா விஷயங்களை அறியாது சுட்டுணர்வு இன்றிக் கிடக்கும். இதுவே ஆன்மாவின் பெத்தநிலை எனப்படும். "பாச ஐம்புலன் தேசுற உணர்த்தப் பசுத்தனி ஞானம் புசித்திடும் அன்றே" என்பதும், "உயிரும் அறிவாய் ஒன்றும் அறியாது அன்றே" என்பதும் சிவசமவாதியர் கருத்து எனச் சங்கற்பநிராகரண நூலில் தரப்பட்டிருக்கின்றன. 'அவை' என்பது இந்திரியங்களைக் குறிக்கும். 'அவை' (ஆன்மாவுக்கு) 'அறிவு உதவும்' என்பது இவ்வரியில்

தரப்படுவது. இது சித்தாந்தியர் கருத்தன்று; சிவ சமவாதியர் கருத்தாம். பாசமாகிய கருவிகளாலன்றி ஆன்மாவிடம் அறிவு நிகழாது என்பர் இவர்.

இக்கருத்தினை மறுத்து உரைப்பது, 'அவைதாம் அசேதனம்' என்னும் வாக்கியம். இந்திரியங்கட்கு அறிவென்பது இல்லை. இந்திரியங்கள் யாவும் சடமே. ஆன்மாவை அசேதனம் என்றுகொண்டால் அதுவும் சடப்பொருள் எனப்படும். சடப்பொருட்கு அறிவு இராது. அப்படியானால் ஆன்மா எதனையும் அறியும் வன்மை அற்றதாகக் கொள்ளப்படும். அப்படி ஆன்மாக்கள் இருப்பதாயின் இவ்வளவு ஏற்பாடுகள் எதற்காக? இந்திரியங்கள் யாவும் அசேதனமாதலால் அத்தகைய பொருள் ஒன்றையும் அறியாது. அங்ஙன முள்ள அறிவற்ற நிலைமையுடைய கருவிகள் எப்படி ஆன்மாவுக்கு அறிவுதர இயலும்? தானே பசித்துய ருழல்பவன் பிறனுக்கு எங்ஙனம் பசி தவிர்க்கும் மருந்தீய வல்லான் ஆவன்? இந்திரியங்களில் எதுவும் அறிவுடையதன்று என்பதை 'அவைதாம்' என்ற சொல் குறிப்பதாகும். இங்கு "அறிவதைம் பொறியே என்னில்" என்னும் சித்தியார்ப்பாடலைப் பயிலுதல் பண்புடைத்தாகும். ஐந்து இந்திரியங்களையும்கொண்டு ஐந்து விஷயங்களையும் அறியும்பொருள் ஆன்மாவே யாம். ஆதலால், ஆன்மா அறிவுடைய சேதனப் பொருளாம் என்பதே மெய்ம்மை ஆகும். என்க! இதனால் சங்கிராந்தவாதியின் கொள்கையும் மறுக்கப் பட்டதாகும்.

எல்லாம் அறிபவன், அறியும் தன்மை அருளுவன் என்னில்:

உணர்த்த உணர்வதே ஆன்மாவின் இயல்பாம் என்பது சித்தாந்தம். முற்றுணர்வினன் இறைவன். அவனுக்கு அறிதற்கண் ஒருகருவியும் தேவைப்படுவ தில்லை. கருவியின் கூட்டுறவான் அறியுங்குறைபாடு உடையது ஆன்மா. ஆதலின் சிற்றறிவும் சுட்டுணர் வும் கொண்டுள்ள ஆன்மாவுக்குக் கருவிகளைக்கூட்டி அறியும்முறைமையைத் தருவான். இதனால் ஆன்மா வானது அறிவிக்க அறியும் தன்மை உடையதென் பது பெறப்படும். இருந்தாங்கிருந்து யாவற்றையும் ஒருசேர அறியும் அறிவே முற்றுணர்வு எனப்படும். இவ்வித அறிவு ஆன்மாவுக்கு இலது; இறைவற்கே உளது. ஆன்மாவோ, கேவலத்தில் மலமறைப்புற்று அறிவின்றியதாய்க்கிடக்கிறது. பிறகு சகலத்தில் கருவி களோடு கூட்டுவிக்கப்படுகிறது. இவ்வாறு கூட்டு விக்கப்பட்டபிறகு சிற்றறிவும் சுட்டறிவும் உடைய தாகிறது. ஆதலால், இவ்விதம் குறைபாடு உடைய ஆன்மாவுக்கு இறைவன் அறிவித்தல் நிகழ்கின்றது. ஆன்மா, அறிவுக்குறைபாடு உடையதாயிருப்பதால் இறைவன் இங்ஙனம் உதவுகின்றனுவன்.

இப்படி இறைவன் உதவுவதுகொண்டு ஆன்மா வானது சற்றும் அறிவில்லாப்பொருள் என விபரீத மாக எண்ணுதலும், ஐயமுறுதலும் தவறும். ஆன்மா வுக்கு, முன்னமே இருக்கும் அறிவை, இறைவன் கருவிகளால் விளக்குவன். இதனையே 'அறியுந்தன்மை அருளுவன்' என்ற தொடரால் நாம் தெரியவேண்டும். பிரமமே, கருவிகளோடு கூடினால் அறிவுக்குறைவு உடையதாகியும், கருவிகளை நீங்கினால் நிறையறிவுடை யதாகவும் விளங்கும் என்று பரிணமவாதியர் கூறுவ துண்டு. ஏகான்மவாதியரும்இவ்விதக்கருத்துடையரே.

இவ்வாறான நிலைமை கடவுளுக்கு இருப்பதா யின் இறைவனும் குறைபாடுடையன் என்றேற்படும். ஆதலின், ஆன்மா என்பது வேறு, இறைவன் வேறு. இறைவன்காட்ட ஆன்மாக் காணும் இயல்புடையதே என நாம் அறிதல் நன்றாம்.

என்னில் ஆன்மா அறிவிலது ஆகும் :

மேலே கூறப்பட்டவாறு அறிவுறுத்தும் உத வியை இறைவன் செய்கின்றவனாவன். ஆன்மாவி னிடம் அறியும் தன்மை இருந்தேதீருகிறது. ஆன்மா அறிவில்லாத பொருளன்று. ஆகையால் ஆன்மாவுக் குக் கருவிகளைக் கூட்டி விளக்குவதே இறைபுரி செய லாம். இதுபற்றியே அறிவை அருளுவன் என்னுமல், அறியும் தன்மை அருளுவன் எனப்பட்டது எனக் கொண்டு, ஏற்றவாறு பொருள் செய்துகொள்வதே தகுதியதாம். தன்மை என்னும் சொல் பரிணாமவாதி யின் கூற்றில் தன்னிச்சையாக அமைந்து கிடத்தல் வியப்புக்குரித்தாம் என்க. தன்மை என்னும் சொல் லியல்பை நாம் நன்கறியாவிடில் ஆன்மா அறிவில்லா தது எனக் கொள்ளவேண்டிவரும். சித்தாந்தத்துக்கு இங்ஙனம் கோடல் பொருந்தாதாகும் என்பதையே 'ஆன்மா அறிவிலதாகும்' என்ற இடம் தெரிவிப்பதா கும் என்க.

ஈசன் அசேதனத்து அளித்திடானே :

இறைவன் ஆன்மாவுக்கு ஏற்கனவே உள்ள அறிவை விளங்கச்செய்கிறானேயல்லாமல் அறிவையே புதிதாகப் படைத்துத் தருகின்றானிலன். அறிவற்ற வற்றிற்குப் புதுவதாக அறிவைத் தருவது இறைவன்

செயலன்று. அப்படியானால் எல்லாக் கருவிகளுமே சேதனப் பொருள்களாகிவிடும். கருவிகள் எல்லாம் யாண்டும் அசேதனப் பொருள்களே. ஆன்மாவுக்கு அவை கண்ணுக்கு விளக்குப் பயன்படுவது போன்று துணை புரியும். கண், விளக்கால் பார்த்து அறிகிறதே யல்லால், விளக்கு, பொருள்களைப் பார்த்து அறிதல் இல்லை.

இப்படித்தான் ஆன்மாவும் கருவிகளினால் பயன் பெறுகின்றது. ஆன்மாவினிடத்தே ஓரளவு அறிவு இருத்தலால்தான் இங்ஙனம் விஷயங்களை அறிந்து பயன் அடைய முடிகின்றது. இவ்வாறு ஆன்மா சேதனப்பொருளாயிருத்தலின், இறைவன் ஆன்மா வுக்குக் கருவிகளைத்தந்து அவற்றின்மூலமாக ஆன்ம அறிவினை விளங்கச்செய்கின்றான். ஆன்மாவினிடம் இவ்வாறான அறிவு இல்லையாயின் ஈசன் ஆன்மாவுக்கு உணர்த்தமாட்டான். இதுபற்றியே, 'ஈசன் அசேத னத்து அளித்திடான்' எனப்பட்டது. அசேதனம் = அறிவில்லாதது.

அம்பு ஒருவன்மீது பாய்ந்து ஊறு செய்திட நேரிட்டால், உலகத்தவர்கள் 'அம்பு பாய்ந்தது' என் பரேயன்றி அம்பு எய்தவனைப்பற்றிச் சொல்வதில்லை. இது உலகவழக்கு. ஆனால் உண்மை அப்படியன்று. அம்புக்கு எய்பவன் தொழிலின்றிப் பாயும் தன்மை இல்லை. " எய்தவர் தம் அருகிருப்ப அம்பை நொந்த கருமம் என்ன?" என்பது மேற்கோளாகக் கொள்ளப் படலாம். இவ்விதமாக உள்ளதே ஆன்மவிஷயமும் என்னலாம். ''வாயில் அளவில் அறிதலில் ஏதம் இல் அறிவு உயிர்க்கு எய்துதல் இலதே'' என்பது சங்கற்ப நிராகரணம்.

## 5. பசுபோதத்தால் அறியப்படுவன யாவும் அசத்தாதல்

*அறிவினால் அறிந்த யாவும்*
*அசத்தாதல் அறிதி; என்றும்*
*அறிவினால் அறி(ய) ஒணாதேல்*
*ஆவ(து)ஒன்(று) இன்மை; தொன்மை*
*அறிவுதான் ஒன்றை முந்தி*
*அதுஅது ஆகக் காணும்*
*அறிவுகாண் அசத்து; மற்ற(து)*
*அறிவினுக்(கு) அறியொணாதே.*

### பொழிப்புரை

(கருத்தா ஒருவன் இருப்பனாயின் அவன் என்னால் அறியப்படானோ எனில்) ஆன்மாவினது சிற்றறிவினால் அறியப்பட்ட பொருளெல்லாம் நிலைநில்லாதது உண்மை என்று அறிவாய்;

(ஆயின், சத்தாகியசிவம் என்னால் எப்பொழுதும் அறியப்படாதோ என்றால்) ஒருகாலத்திலும் சிவன் ஆன்மாவால் அறியப்படாதிருக்குமாயின் இவனுக்குச் சிவனைக்கொண்டு ஆவதாகிய ஒரு பிரயோசனமும் இல்லாமை உண்மையாம்;

(ஆனால், என்னால் அறியப்பட்டதெல்லாம் அசத்தென்று சொன்னது என்னை? எனில்) அநாதியாய் வருகின்ற பசுபோதமாவது ஒரு விஷயத்தை இந்திரியங்களாலே முற்பட்டுப் பொருந்தி அது அதுவாகச் சுட்டியறியப்படும் பொருள்காண் அசத்து என்றது.

அந்தச் சிவம் இந்தச் சுட்டறிவினால் அறியப்படாது. காணும் அறிவு என்பது காணப்படும் பொருளைக் குறிக்கும்.

## விளக்கவுரை

**அறிவினுல் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி :**

கருத்தா ஒருவன் உண்டு. அவனுல் அறிவிக்கப் பட்டுத்தான் ஆன்மா அறியும். தானே தனித்துநின்று அறியாது. ஆன்மாவுக்கு உள்ளது சிற்றறிவு. கருவிக ளுடன் கூடிநிற்கும்போது சுட்டறிவுடையதாகும். சிற்றறிவால் முற்றறிவுப் பொருள் அறியப்படாது. சுட்டறிவால் அறிவதற்குச் சிவன் சுட்டி அறியப்படும் பொருளல்லன். இப்படிச் சிற்றறிவாலும் சுட்டறி வாலும் சிவன் அறியப்படான் என்ருல் கருத்தா ஒரு வன் உண்டா என்பதே ஐயத்திற்கிடமாகிறதே. நிச்ச யமாய் உள்பொருளாயின், ஆன்மாவினுல் அறியப்பட வேண்டுமே. கடவுள், உள்பொருளாயின் ஆன்மா வினுல் அறியப்படவேண்டும். அப்படி அறியப்படா மையின் கடவுளை இல்பொருள் எனவேண்டிவரும் என்று சிலர் வாதம் புரிவர்.

பரம்பொருள், உள்பொருளாயிருப்பதனுலேயே ஆன்மாவினுல் அறியப்படவேண்டும் என்பதில்லை. கடவுள், மனம் வாக்குக் காயங்களால் ஆகிய பாச அறிவைக் கடந்திருப்பவன். மேலும் முற்றறிவுப் பொருள். ஆதலின், ஆன்மா, தன்னுடைய மனம் வாக்குக் காயங்களைக்கொண்டு கடவுளை அறிதல் இய லாது. இருட்டுச் சூரியனைப் பார்க்க விரும்பினுல் இய லாது. இதனுல் சூரியனே இல்லை என்றல் தவருகும். மனம் வாக்குக் காயங்களால் பொருள்களை ஆன்மா அறியமுடிகிறதே என்ருல், கருவிகளைக் கொண்டு - சிற்றறிவைக் கொண்டு - சுட்டறிவைக் கொண்டு - கண்டறியப்படும் பொருள்கள்யாவும் சடப்பொருளும்

சுட்டுப்பொருளுமே ஆகும். கடவுள், சடப்பொருளு மல்லன்; சுட்டுப்பொருளுமல்லன். சடப்பொருளாயிருப் பவை எவையும் நித்தியப்பொருளல்ல; அழிவெய்தும். அங்ஙனமே சுட்டுப்பொருளாயிருப்பனவும் அழிவெய் தும். பரம்பொருள் சடப்பொருள் என்றால் அதுவும் அழிவெய்திடும். பரம்பொருள் அழிவற்றது. ஆதலால், ஆன்மாவினது சிற்றறிவினால் - பாசஞானத்தால் - பசு போதத்தால் - அறியப்படுபவன் அல்லன் சிவன் என் பது தெரியப்படும் என்னலாம். "மனத்தொடு வாக்கு இறந்த சித்துருவு அது; அசித்து ஆம் மனத்தினால் தேர்வதெல்லாம்" என்பது சித்தியார். இதுபற்றியே, '(ஆன்ம) அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி' எனப்பட்டது.

என்றும் அறிவினால் அறியொணாதேல்
ஆவதொன்று இன்மை:

மேலே சொல்லப்பட்டவாற்றால் ஆன்மாவினால் அறியப்படும் பொருள் சடமாய் அழியும் என்பது சரி. ஒருபோதும் ஆன்மாவினால் அறியப்படாத பொரு ளாகச் சிவம் இருப்பதாயின் அப்பொருளால் ஏதும் பயன் இல்லையாகுமன்றே! அத்தகைப் பொருளின் இருப்பு எற்றுக்கு என்று வாதிப்பாருளர். சிவபரம் பொருள் ஒருவாற்றால் அறியப்படுவதுமன்று; அறியப் படாததுமன்று என்று இருதிறப்படக்கூறுதல் மயக்க முடைத்தாகும். சிவப்பொருள் உண்டென்றால், அறி யப்பட்ட பொருள் சடமாய் அழிவெய்தும் எனப்படு கிறது. அறியப்படாதபொருள் எனிலோ இப்பொருளை உள்பொருளெனக் கொள்வதாக முடியும். பொருள் இருப்பதாயின் ஆன்மாவால் அறியப்படல் வேண்டும்.

அறியப்படாததாலுல் அப்பொருளால் ஒருபயனுமில்லை என்றே கொள்ளவேண்டும். ஆதலின். பரம்பொருளை அறியப்படுமென்றும், அறியப்படாதென்றும் கூறுதல் குற்றமாம் என்றும் வாதிப்பர். இதனுல் அறியப்பட வேண்டிய உண்மை இன்னதென்பது தெரியப்படல் நன்று.

உண்மையாதென்றுல், சிவம் அறியப்படுவதன்று என்பதற்குக் கருவி கரணங்களால் அறியப்படுவது அன்று என்பது பொருளாகக் கொள்ளப்பட வேண்டும். அறியப்படாததன்று என்பதற்குச் சிவஞானத்தினுலே அறியப்படாதது அன்று என்பது பொருளாகக் கொள்ளப்படவேண்டும். இதன் கருத்து யாதெனில், மேலே சொல்லப்பட்ட முறைப்படி பாச பசு ஞானங்களைக் கடந்துநின்று அறிவதற்குரிய வல்லமை உடையவன் ஒருவன், அந்தச் சிவப்பொருளை அப்பொருளோடு ஒன்றுபட்டு நின்று அப்பொருளின் அருளால் அறிவன் என்பதாம். ஒன்றுய் நின்றுல் அறியமுடியாதே ? அறியமுடியுமாயின் ஒன்றுய் நிற்றல் இயலாதே ? என்றுல், சிவப்பொருளை அறியும் அனுபவத்தின்போது அறிவு நிகழ்வதற்கு இறைவன் ஆன்மாவின் அறிவுடன் கலந்து ஒன்றுயிருப்பன்; அறியப்படுவதற்குப் பொருள்தன்மைபற்றி ஆன்மாவின் வேறுயிருப்பன்; அறிதல்தொழில் நிகழ்வதற்கு ஆன்மாவின் அறிவைச் செலுத்தி அவ்வறிவோடு உடனுயிருப்பன்; இப்படி அத்துவிதமாய் இறைவன்நிற்பதனுல் ஆன்மாவினுல் அறியமுடிகிறது.

கண்ணுனது, சூரியனை அறியும்போது கண்ணொளியோடு சூரியன் கலந்து ஒன்றுய் நிற்கும். காணப்படு

வதற்குச் சூரியன் கண்ணின் வேருயும் இருப்பன். காணும் தொழில்நிகழ்ச்சிக்குச் சூரியன் கண் ஒளியைச் செலுத்தி உடனுய் நிற்கும். இவ்வாருனதே இறை செயலும் என்னலாம். இதுவரை கூறியவைகொண்டு, சிவன் அருளினுல் ஆன்மா சிவத்தை அறியும் என்பது பெறப்படும். சிவபரம்பொருளை அப்பரம்பொருளின் அருளால் ஆன்மா பிரிப்பின்றி நின்று அறியும் என் பதைச் சிவஞான சித்தியார் நூலில் "அறிபொருள் அசித்தாய் வேருேம்" எனத் தொடங்கும் திருவிருத் தத்தால் அறியலாகும். இதனுல். 'அறிவினுல் அறிய ஒணுதேல் ஆவதொன்றின்மை' என்பதன் உண்மை இன்னதென்பது தெளிவுற விளங்கும். பரம்பொருள் அறிவானும், அறிபொருளும், அறிவும் எனப் பகுத் தறியமுடியாநிலைமை உடையது. ஆனபடியால்தான் உயிரறிவினுல் அறியவொண்ணுது என்பது உண்மைக் கூற்றும் என்க! 'உயிர் அறிந்தது' என்பதெல்லாம், அறிதற்பயன் உயிர்க்காதல்நோக்கிக் கூறப்படுவதாம்.

முத்தியில் சிவனை ஆன்மா அறியாது கிடக் கும் என்பது பாடாணவாதியின் கொள்கை. இதனை 'ஆவதொன்று இன்மை' என்ற வாக்கியம் உணர்த்து கிறது. இந்தக் கொள்கையும் தவறென்பது மேலே தரப்பட்ட செய்திகளால் உணரப்படும். எல்லாக்கருவி களும் நீங்கி ஆன்மா ஆணவத்தோடு கூடி ஒன்றும் அறியாமல் கிடப்பது கேவலத் துயரம் எனப்படுமே யல்லாமல் முத்தி எனப்படாது. "பாடாணத்தில் கூடா முத்தி" என்பது சங்கற்ப நிராகரணம்.

தொன்மை அறிவுதான் ஒன்றை முந்தி
அதுஅது ஆகக்காணும் அறிவு காண் அசத்து:

ஆன்மா உயிர்ப்பொருள் - சித்துப்பொருள். ஆதலால் அதனிடம் இயல்பாகவே அறிவு உண்டு. ஆனால் அந்த அறிவு விறகினுள் உள்ள தீப்போல ஆணவமலத்தால் மறைபுண்டுள்ளது. இங்ஙனம் முற்றிலும் மறைப்புண்டிருத்தலால் ஆன்ம அறிவு தொழிற்பட இயல்வதில்லை. இந்த நிலையில் ஆன்மா எதனையும் அறியாது கிடக்கும். கண்ணுக்கு விளக்குப்போல் கருவிகளோடு கூடினால் ஓரளவு விஷயங்களை அறியும்திறம் உடையதாகும். கருவிகளைச் சார்ந்தறிவதும், மயங்கி அறிவதும், அறிந்து மறப்பதும், மறந்து பின் அறிவதும் ஆகிய இப்படிப்பட்ட சில குறைபாடுகள் ஆன்ம அறிவிற்கு உள்ளன. இது பசுபோதம் என்றழைக்கப்படும். கேவலநிலைமுதலாகவே இத்தகைக் குறைபாடுடைய பசுபோதம் இருத்தலால் ஆன்மாவுக்கு இப்பசுபோதம்-ஜீவபோதம் - இயல்பாக இருப்பதாகும். ஆகலின், 'தொன்மை அறிவு' எனப்பட்டது.

சிற்சில வாதியர், ஆணவமலத்தை ஆன்மாவின் இயற்கை என்பர். அது தவறு. ஆணவமலம் ஆன்மாவின்குற்றமேயாகும் ; குணமன்று. ஆகையால்தான் மல நீக்கம் செய்யமுடிகிறது. அறிவுடைமையே ஆன்மாவின் இயல்பாகும். இந்த அறிவைக் கொண்டுதான், ஆன்மா சகலநிலையில் விஷயங்களைக் கிரகிக்க வல்லதாகிறது. ஆணவமலத்தை உயிர்க்குணம் என்பவர் பாடாணவாதியராவர். இவர்கள், இம்மலம் உயிரோடு கலந்துநிற்றலால் உயிரின்குணவிசேடம் என்கின்றனர். ஒருபொருளினிடம் குணம்போலவே குற்றமும் கலந்து நிற்றல்கூடும். அதனைக்கொண்டு குற்றத்தையும் குணமெனக் கோடல் பொருந்தாது. கண்ணுக்குக் குணம் ஒளியே. குருட்டுக்கண்ணுக்கு அவ்வொளி படலத்தால்

மறைப்புறுதலின் கண்பார்வை தெரிந்திலது. இது கொண்டு படலத்தையே கண்ணின்குணம் எனல் தவருகும். படலம் உரிக்கப்பட்டபின்னர், பார்வை தெரியலுறுகிறது. இதனைக் "குருடன்தன் கண்ணின் குற்றம் கண்ணின்தன் குணமோ கூருய்" எனக் கூறித் தெருட்டுகிறது சித்தியார். மலம் குணமெனக்கொள்ளப்படின், ஆன்மாவைச் சித்துப்பொருள் என்ளுது சடப்பொருள்என வேண்டிவரும். ஆதலால், அறிவே ஆன்மாவின் குணமாம். இது தொன்மையானதே.

இத்தகைய தொன்மை அறிவே, மாயையிஞல் தரப்படுகிற கலை முதலிய தத்துவங்களைக்கொண்டு ஒவ்வொரு பொருளையும் - விஷயத்தையும் - இந்திரியங்களின் வாயிலால் உலகமுகமாக ஓடிச்சென்று அழுந்தி அதுவதுவாகிச் சுட்டி அறிகின்றது. இதுவே சுட்டறிவு எனப்படும். இந்தச் சுட்டறிவால் அறியப்படும் பொருள்கள் யாவும்-அவற்ருலேற்படும் அனுபவமும் - நிலையற்றவையாம். ஆதலின் அசத்து எனப்படும். அசத்து = நிலையற்றது.

விஷயத்தை வேருக நின்று அறிவது சுட்டறிவாம். ஒரு பொருளின் தோற்றத்தைப் பற்றி நிற்கையில் அப்பொருளின் தோற்றமாகவே தானும் நிற்கிறது. பிறகு அப்பொருளைவிட்டு நீங்கிப் பிறிதொரு பொருளைப் பற்றி நிற்கையில் முன்னைய தோற்றம் கெட்டுவிடுகிறது. ஆதலால் அவ்வறிவு நாசமுடைத்தென்பர். ஒன்றில் நிலைபெருமல் ஓரிடம்விட்டு ஓரிடம் தாவுவதாலும், தனு கரணம் புவனம் போகம் முதலாகப் பல வேறுவகைப்பட அறிவதாலும், மலத்தோடு கலத்தலாலும், உண்மை அறிவு தலைப்பட்ட பிறகு வேறுபட்டு

ஒழிவதனாலும், அச்சுட்டறிவு அசத்தே ஆம். ஆகையால் அப்படிப்பட்ட சுட்டறிவினால் சுட்டி அறியப்பட்ட பொருள்கள் யாவும் அசத்தேயாவனவாம். இது குறித்தே ஆசிரியர், 'ஒன்றை முந்தி அது அது ஆகக் காணும் அறிவுகாண் அசத்து' என்றுள்ளார். இங்கு, "ஆவதாய் அழிவதாகி" எனத் தொடங்கும் சித்தியார்ப் பாடல் காணத்தகுவதாம். இதனால், அறிபொருள் அனைத்தும் அசத்தென்பது அவற்றை அறியும் அறிவின் இயல்புபற்றித் தெரிவிக்கப்பட்டதாயிற்றென்க!

மற்றது அறிவினுக்கு அறியொணாதே:

ஞானம் மூவகைப்படும். அவை, பாசஞானம் - பசுஞானம் - பதிஞானம் என்பவை. பாசஞானமாவது, ஏகதேசமாய் அறிதலாம். அதாவது, சொற்பிரபஞ்சமும், பொருட்பிரபஞ்சமும் ஆகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாக ஆன்மாவினிடம் நிகழும் ஏகதேச ஞானமாம். பசு ஞானமாவது, செருக்குற்றறிதலாம். அதாவது, பிரபஞ்சங்களைப் பொருந்திய ஆன்மா இவையெல்லாம் தனக்கடங்கியவை என்றும், அவற்றின் நீங்கியபோது சிவனை ஒப்பேன் என்றும் செருக்கால் சடுதியில் மதிக்கவருவதாகிய சிவசமவாத ஞானமாகும். பதிஞானமாவது ஒருசேர அறிதலாம். எனினும் பதியினுள் அடங்கிப் பதிவாயிலாக நிகழும் ஞானமாகும் இது. இவற்றால் பாசஞானம் சுட்டறிவு என்றும், பசுஞானம் சிற்றறிவு என்றும், பதிஞானம் பதியினுள் அடங்கிய அறிவு எனவும் தெரியலாம். எனவே, இவற்றின் வேறாய்நின்று ஆன்மா சிவத்தினை அறிதல் இயலாதாம். "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்" எனத் தொடங்கும் சித்தியார்ப்பாடல் இங்குப் பார்த்தல் பயனுடைத்தாம். பதிஞானத்தால் தன்

அறிவினிடம் வைத்து ஆராய்ந்து அன்புடன் திருவடி நீழலின்கீழ் நீங்காதே தூங்கிடின் அப்பரமனருளால் ஆன்மா சிவத்தை அறியலாகும். உள்ளத்தின்கண் ஆன்மஞானத்தை விளக்குவது சிவமே ஆதலால் சிவமே தன்னைத் தருவன் என்க! இதனாலேதான், ஆசிரியர் 'மற்று அது அறிவினுக்கு அறிய ஒண்ணாதே' என்றுரைத்துள்ளார். "நினைப்பதாக சிந்தை செல்லும்" என்னும் திருவாசகப்பாடல் இங்குக் காணத்தகும் மேற்கோளாகும். மற்றும் சிவஞானத்தால் பரமனை அறியுமாற்றை, "சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த" என்னும் திருவாசகப்பாடலும் ஈண்டுக் காண்டல் தகுவதேயாம்.

## 6. சத்து அசத்து அறிதல்

(சிவன் தோய்வறநின்றுணர்த்தல்)

*எவ்வறி(வு) அசத்த றிந்த(து)*
*எனில்உயிர் அறியா(து); ஈசன்*
*அவ்வறி(வு) அறியான்; அல்லது*
*அசேதனம் அறியா(து); ஆவி*
*செவ்விய கருவி கூடித்*
*தெரிவுறு(து); அருளில் சேரா(து);*
*உவ் இரு வகைய(து) என்னில்,*
*ஒளி இருள் ஒருங்(கு) உருவே.*

## பொழிப்புரை

*அந்த அசத்தை அசத்து என்று அறிந்தது எந்த அறிவு என்றால், சிற்றறிவுடையது தானாக ஒன்றையும் அறியாததாதலால் உயிரானது அசத்தைச் சத்து என்றே இருப்பதொழிந்து அசத்து என்று அறிய மாட்டாது;*

*முற்றறிவுடைய ஈசனே என்றால், ஒன்றை இது எனச் சுட்டி அறியான்;*

*அன்றி, இவர்களை ஒழிந்த கருவிகள் சடம் ஆகையால் பாசஞானம் அறியாது;*

*சிற்றறிவான ஆன்மாவும் அதற்குக் கருவியாகச் சிறந்த சடமும் கூடி அறியும் என்றால், விளக்கம் உண்டாகாது;*

*அருளான சிவஞானமும் உயிரும் கூடி அறியும் என்றால், பெத்தத்திலே ஆன்மா அருளிற்பொருந்தாது;*

*மற்றைப்பதியும் பாசமும் கூடி அறியும் என்றால் ஒளியும் இருளும் ஒரிடத்தில் நில்லா.*

குறிப்பு :- ஒவ்விருவகையது என்று பாடங்கொள்வாரும் உளர். ஒத்த இருவகை எனப்பொருள்தரும் இந்தப் பாடம் இலக்கணத்தோடும் சம்பிரதாயத்தோடும் பொருந்தாது என்பர். இப்பாடலில் விகாரவாதி, பரிணாமவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, சைவர், ஐக்கியவாதி என்னும் அறுவருடைய வாதங்கள் மறுக்கப்பட்டுள்ளன. அசத்தை அசத்தென்று அறிந்தது, பசு-பாச-பதி ஞானம் மூன்றும் அன்றாம்.

## விளக்கவுரை

**எவ்வறிவு அசத்து (என) அறிந்தது எனில், உயிர் அறியாது:**

உலகில் உள்ள பொருள்கள் சத்துப்பொருள் எனவும், அசத்துப்பொருள் எனவும் இரண்டுவகைப்படும். சத்துப்பொருள் எப்போதும் நிலைத்திருப்பவை ஆகும். அசத்துப்பொருள் என்பது, காரியப்படுங்கால் தோற்ற

முடையதுபோல் காணப்பட்டுக் காரண அவத்தையில் காணப்படாமல் ஒடுங்கிப்போவதாகும். முயற்கோடு, பேய்த்தேர், இப்பிவெள்ளி, கயிற்றரவு முதலிய பொய்த் தோற்றங்களும் அசத்தின்பாற் படுவனவேயாகும். அசத்துக்களுக்குத் தம்மையும் பிறவற்றையும் அறி விக்கும் இயல்பு கிடையாதென்பது வெள்ளிடைமலை. அறியப்படும் பொருள்கள் தோன்றி அழிவனவாகும். அறியப்படாத பொருளுக்குத் தோற்றக்கேடுகளில்லை. அறியப்படாத பொருள்கள் சத்தாதல் ஒருபோதும் இல்லை. அறியப்படாத பொருள்களால் பெறப்படும் பயனும் இல்லை.

இப்படி ஒருபொருளைச் சத்தெனவும் அசத்தென வும் அறிவது எப்பொருள்? உயிரே இங்ஙனம் முற்றி லும் அறியும் திறனுடையது என்றால், உயிருக்குக் கேவல நிலையில் அறிவு தொழிற்படுதலே இல்லை; சகலத்திலோ கருவிகளின் துணையால் எவ்வளவு அறி யலாமோ அவ்வளவுதான் அறியமுடியும். அப்படி அறியும் திறனைத்தான் சுட்டறிவு என்கின்றோம். மலமறைப்பும் உடைமையால் சிற்றறிவு எனவும் சொல்லுகிறோம். ஆகவே. இது அசத்துப்பொருள் என்று அறியும் ஆற்றல் உயிரினிடமே உள்ளது என் பதற்கில்லை. உயிரானது அறிவுக்குறைபாடு உடைமை யால் அசத்தைக்கூடச் சத்தென மயங்கியும் மாறு பட்டும் அறியுமேயல்லாமல் உள்ளதை உள்ளவாறே அறிவதில்லை. ஆனால் ஈசுவர அவிகாரவாதியர், ஆன்மா அறிவுடைப்பொருள்; அறிவே அது; ஆதலால், எதனை யும் அறியும் திறனுடையது என்பர்.

அறிவுடைப்பொருளானால் எதனையும் நின்றாங்கு அறியவேண்டும். துணைகள் தேவைப்படா. இதனால்

இந்திரியங்களின் உதவி தேவைப்படவேண்டுவதில்லை. ஆனால், இந்திரியங்களைப் பொருந்தியே விஷயத்தை அறிகிறது. இந்திரியங்களைப்பொருந்தியறியும் என்பதனாலேயே ஆன்ம அறிவு சுத்தமுடைத்தன்று என்பது தெரியலாம். மற்றும் ஒரு பொறியைக் கொண்டே எல்லா விஷயத்தையும் அறியமுடிவதுமில்லை என்பதும் நாம் அறிவோம். "அறிவிலாமை கண்டனம்" என்பது சங்கற்ப நிராகரணம். ஆகையினால், ஒரு பொருளை அசத்தென அறியும் நல்லறிவு ஆன்மாவுக்கு இன்மையால், ஆன்மா அசத்தெனத் துணிந்தறிதல் செய்யாது என்பது மெய்ம்மையாம். இதுவே, 'எவ்வறிவு அசத்து அறிந்தது எனில் உயிர் (நிறையறிவு இலாமையின்) அறியாது' எனப்பட்டது.

ஈசன் அவ்வறிவு அறியான் :

ஈசனே, இங்ஙனம் சத்து × அசத்து என்பனவற்றை அறிகின்றான் என்றால் அதுவும் சரியன்று. பரம்பொருள் பேரறிவுடையவன். இருந்தாங்கறியும் இயல்புடையவன். ஒன்றைச் சுட்டியறிவேண்டியவனல்லன். அவனே யாவுமாய் நிற்பவன். ஆதலால், சுட்டறிவுக்குரிய பொறி புலன்களால் அறியவேண்டிய அவசியம் இல்லாதவனாவன். "வானாகி மண்ணாகி" என்னும் திருவாசகப்பாடற்கருத்தை ஈண்டுக் கருதிப் பார்த்தல் நன்றாம். அறிவானும், அறிவிப்பானும், அறிவும், அறியப்படு பொருளும் இப்படி யாவுமாய் இருப்பதே இறை இயல்பாதலின், ஈசன், கருவிகளின் துணைகொண்டு சத்து × அசத்து என அறியும் இயல்பினன் ஆகான் என்பது தெரியலாம். இதுபற்றியே, 'ஈசன் அவ்வறிவு அறியான்' எனப்பட்டது.

அல்லது அசேதனம் அறியாது :

ஒருவேளை கருவிகளே விஷயங்களைக் கண்டு அறிவிக்கின்றன. இதற்கு ஆன்மா அறிவுடையதாக இருக்க வேண்டுவதில்லை, என்று வாதிப்பாரும் உளர். கருவிகள் யாவும் உயிரற்றவை; சடப்பொருள்கள். ஆதலின் அவைகள் அறிவுடையனவாக இருத்தல் ஒருபோதும் இயலாது. அசத்தாகிய பிரபஞ்சத்தை இந்திரியங்கள் அறியும் என்பது சங்கிராந்தவாதியின் கருத்தாம். மற்றும் ஆன்மாவின் முன்னிலையில், காந்தமும் இரும்பும் போன்று உடல் இயங்கும்; அப்படி இயங்கும்போது, கருவிகளே விஷயங்களை அனுபவிக்கும் என்பர் இவர்கள். இது பொருந்தாது. ஐந்து இந்திரியங்களும் ஒவ்வொரு விஷயமாகவே அறியும். ஓர் இந்திரிய விஷயத்தைப் பிறிதோரிந்திரியம் அறியாது. ஒரே இந்திரியமான இரண்டு செவிகள், இரண்டு கண்கள் ஒரேகாலத்தில் இரு வேறு விஷயங்களைக் கேட்டலும், காண்டலும் செய்யா. அனுபவம் ஆன்மாவுக்கே உரியதாக இருத்தலின் கருவிகள் அசேதனமேயாகும். "மறுதியும் மெய் உயிர்ச்செயலும் தனக்கு இலது ஒருவர்க்கு எனத் தெளிகிலை" என்பது சங்கற்ப நிராகரணம். "நீ...ஒன்றின் மறைந்து ஐம்புலன் காண வாராய்" என்பது நக்கீரர் வாக்கு. இதனில் புலன்கள் அறிதிறனுடையன அல்ல என்பது புலப்படுத்தப்பட்டுள்ளமை காணலாம். இங்குக் கூறியவற்றால் 'அசேதனம் அறியாது' என நாமுணர்தல் நன்றாம். இதனால் பாசஞானத்து இயல்பு தெரிவிக்கப்பட்டதென்க.

ஆவி, செவ்விய கருவிகூடின் (உம்) தெரிவுறுது :

சிவசமவாதியர், உயிரானது செப்பம் வாய்ந்த கருவிகளுடன் கூடினால் அறிந்து அனுபவிக்குமல்லால்,

தானுக அறியமாட்டாமையின் உயிர் கருவிகளின் கூட்டமே பிரபஞ்சத்தை அறியச்செய்யும் என்பர். பாசஞானமும் அநாதியே உள்ள ஒன்ரும். பாச ஞானமே இந்திரியங்கள். இவையே விஷயத்தை விளக்கும். அப்போது ஆன்மஞானம் அந்த விஷயத்தைப் புசிக்கும். பாசமாகிய கருவிகளால்தான் ஆன்மாவிடம் ஞானம் நிகழலுறும். இவ்வாறெல்லாம் இவ்வாதியர் வாதிப்பர்.

நிலைபெற்ற உயிர்கட்கு விஷயங்கள் வேருயிருப் பவையாம். பசுஞானம், தானென்றியாகவே விஷயங் களை அறிவதில்லை. பாசஞானமும் அப்படிப்பட்டதே. கண்ணுக்குக் காணும்தன்மை இருப்பினும் ஏதேனும் ஓர் ஒளியின் துணை தேவைப்படுகின்றது. அப்போதும் ஆன்மா உடன் நின்ருலல்லது ஒளியாலோ, கண்ணி ஞலோ காண முடிவதில்லை. இதுகொண்டு அறிவுக்கு வேருேர் துணை தேவைப்படுதலை நாமறியலாம். இது பற்றியே, 'ஆவி செவ்விய கருவி கூடின் தெரிவுறுது' எனப்பட்டது. எனவே, செவ்விய கருவி கூடினும் ஆவிக்கு உண்மையான விளக்கம் ஏற்படாது என்பது தெரியப்படுதல் காணலாம்.

ஆவி, அருளில் சேராது :

ஐக்கியவாதியர், ஆவி அருளிற்சேர்ந்து அறியும் என்பர். உயிர் இப்போது சகலநிலையில் உள்ளது. இந்தச் சகலநிலையில் கருவிகளோடு கூடிப் பிரபஞ் சத்தை மெய்யெனக்கொண்டும் கண்டும் விஷய போகங்களைத் துய்த்தலிலேயே ஆவியானது உழல் கிறது. இந்தநிலையில் இறையருள் வாய்ப்பு ஆவிக்குக் கிடைப்பது மிக அரிது. இருவினை ஒப்பு - மலபரிபாகம்

முதலனை ஏற்பட்ட பின்னரே, ஆசாரியன் ஆட்கொள்வ தன்மூலம் அருள்வாய்ப்புக்கிட்டும். அப்போது ஆன்மா முத்திநிலைக்கே அருகதைப்பட்டுக்கிடக்கும். அங்ஙன மின்றி இப்பெத்தாவத்தையில் திருவருளோடுகலத்தல் ஏற்படாது. திருவருளோடு கலந்திடும் ஆன்மா, பரமே பார்த்திருக்குமல்லாமல் பதார்த்தங்களைப் பார்த்திருத் தல் இல்லை. ஆதலின் பிரபஞ்சானுபவத்தின்பொருட்டு ஆவி ஒருபோதும் அருளுடன் சேராது என்றுரைக்கப் பட்டது. அருளெனப்படுவது சிவஞானமாம்.

உவ் இருவகையது என்னில்
ஒளி இருள் ஒருங்கு உருவே :

ஒளி என்பது பதி. இருள் என்பது பாசம். பிரபஞ் சத்தை அருளும் இந்திரியங்களும் கூடி அறியும் என் பர் ஒருசார் சைவர். அருளுக்கு இந்திரியங்களுடன் கூடி அறியவேண்டுவது ஏதும் இன்றும். அண்ண லாம் பரமன், கலைமுதலாகிய கருவிகளை ஆன்மாவுக்கு விளக்குப்போலப் பயன்படும்பொருட்டு உதவினனே யல்லால், தனக்குதவுமாறு படைத்திலன். மாயையின் தயவு இறைவற்கு எள்ளத்தனையும் வேண்டுவதில்லை. மாயை இறையினுள் ஒடுங்கிடுமல்லாமல் கட்டுப்படுத் தாது. இந்திரியங்கள் ஆன்மாவுடன் சம்பந்தப்படுவ தல்லால் சிவனெடுசம்பந்தப்படுதல் இல்லையாம். "மல மிருணிரையொளி, தானமர் விளக்கிற் றகுமிருட் கலாதி கள், ஈனமில் இவனிடத் தெவ்வாறிசைந்தன" எனவரு மிடம் மேற்கோளாக ஏற்கத்தகுவதாம். பதியும் பாச மும் கூடி அறியும் என்பது, ஒளியும் இருளும் ஒருங்கு கூடி நிற்கும் என்பது போல்வதாம். இது நடவாச் செயலாம். ஆவியும் கருவியும் கூடி அறியா என்று

முதலிற்கூறப்பட்டது. பிறகு ஆவியும் அருளும் கூடா என்று கூறப்பட்டது. எஞ்சி நிற்பது அருளும் கருவியுமேயாதலால் 'உவ் இருவகையது' என்றுள்ளார் ஆசிரியர். உப்பக்கம் = அப்பக்கம்.

முப்பொருள்களையும் ஒவ்வொன்றாகத் தனித்தனி மறுத்துரைத்தார் ஆசிரியர் முதற்கண். பிறகு இரண்டிரண்டாகக் கூடி அறியும் என்பதை மறுத்தலானார். இந்த மறுப்புக்களை இப்பாடல் தரலுற்றது. இதுவரை பார்க்கப்பட்டனகொண்டு உயிர் அறியாது என்றதனால் விகாரவாதியும் - ஈசன் அறியான் என்றதனால் பரிணமவாதியும் - அசேதனம் அறியாது என்றதனால் சிவசமவாதியும் - ஆவியும் கருவியும் அறியா என்றதனால் சங்கிராந்த வாதியும் - உயிரும் அருளும் கூடா என்றதனால் சைவரும் - பதியும் கருவியும் கூடா என்றதனால் ஐக்கியவாதியும் முறையே இப்பாடலில் மறுக்கப்பட்டமை தெரியலாகும். அசத்தை அசத்து எனவும், சத்தைச் சத்து எனவும் அறிவதே உண்மை அறிவின் இலக்கணமாகும். "மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கியமை அதிசயம்" என்கிறது அதிசயப்பத்து.

### 7. அருள் கண்ணாக ஆன்மா அறிதல்

(ஆன்மாச் சதசத்தாம்)

*சத்(து)இது என்(று) அசத்துத்*
*தான்அறி யா(து); அசத்தைச்*
*சத்(து)அறிந்(து) அகல வேண்டா;*
*அசத்(து)இது சத்(து)இது என்றுஓர்*
*சத்(து)இருள் ஒளிஅ லாக்கண்*
*தன்மைய தாம்;அ சத்தைச்*
*சத்துடன் நின்று நீக்கும்*
*தன்மை யால்சத சத்(து)ஆமே.*

## பொழிப்புரை

அசத்தான பாசம் சடம் ஆகையால் சத்தாகிய சிவத்தை 'இது' என்று சுட்டி அறியமாட்டாது;

சத்தாகிய சிவம் வியாப்தமாகையால் அசத்தை 'இது' என்று அறிந்து நீங்கவேண்டா;

மலபாகத்தால் பிரகாசித்த அருளாலே பாசம் இது, சிவம் இது என்று அறிகின்ற ஆன்மாவானது, இருளிலே நின்றபோது இருளாயும், ஒளியிலே நின்ற போது ஒளியாயும், இருளும் ஒளியும் அல்லாத கண்ணின்தன்மை போலும் தன்மை உடையதாம்;

ஆகவே, முன்னர்க் கூடிநின்ற மலங்களைச் சிவத்துடனே கூடிநின்று போக்கும் முறைமையாலே அவ்வான்மாவுக்குச் 'சதசத்து' என்ற பெயராம்.

குறிப்பு: கண்ணின் தன்மைபோலும் தன்மையாவது, மலத்துடனே கூடிநின்றபோது மலமாயும் சிவத்துடனே கூடிநின்றபோது சிவமாயும் நிற்கும் முறைமை. சத்து= உள்ளது; அறிவு. இது அசத்தை அறியாதாயின், சத்தையும் அறியாது. ஆதலின், இவ்விரண்டையும் அறிவது எவ்வறிவு என்று வினவச் சத்தையும் அசத்தையும் அருள் கண்ணாக ஆன்மாவே அறியும் என்பது கருத்தாம். ஓர் சத்து : வினைத்தொகை.

## விளக்கவுரை

இச்செய்யுளில் ஆன்ம அறிவின் இயல்பு விளக்கப்படுகின்றது. ஆன்மா அறிவுடைப்பொருள் எனினும், சார்ந்ததன்வண்ணத்ததாகவே அதன்அறிவுவிளங்கும். பாசத்தைச் சார்ந்தபோது பாசமயமாக விளங்கிடும். பதியைச் சார்ந்தபோது பதிவிளக்கம்பெற்றுவிளங்கும்.

இப்படி இரண்டினிடமும் சார்ந்து நிற்கும் இயல்பு உடையது ஆன்மா. ஒருகாலத்தில் இரண்டினிடமும் சார்ந்துநில்லாது. ஒன்றைச் சார்ந்திடுகையில் மற்றொன்றைச் சார்ந்திராது. சகலாவத்தையில் பாசப் பொருளைச் சார்ந்து போக போக்கிய விருப்புற்றிடும். சுத்தாவத்தையில் சிவஞானப் பெருக்குற்றுச் சிவத்தினது திருவருளை அடைந்துநிற்கும். மலங்களெல்லாம் ஒவினபோதுதான் ஆன்மாச் சுத்தநிலை உற்றிடும்.

மற்றும் ஆன்ம அறிவினியல்பினைத் தொகுத்துக் கூறின், 'இந்திரியங்களின் துணையில்லாமல் தானே ஒரு விடயத்தையும் ஆன்மா அறியாது; முன் அறிந்த விஷயத்தைப் பின் ஒருவிஷயத்தை அறியும்போது மறந்திடுகின்றது; மறந்த விஷயத்தை மீண்டும் அறிவித்தால் அறிகிறது: இவ்வாறு அறியும் தன்னை அறியாது; ஆகவே இறைவன் அறிவிக்க அறியும் இயல்பு உடையது' என்றுரைக்கலாம். "அறிந்திடும் ஆன்மா ஒன்றை" என்னும் சித்தியார்ப்பாடல் இங்கு அறிதல் இங்கிதமுடைத்தாம்.

**சத்து இது என்று அசத்துத் தான் அறியாது :**

அசத்து என்பது சடப்பொருளாம். அழியும் பொருள் சடப்பொருள் எனப்படும். இதனால் சடப் பொருள் அழியும்பொருள் எனப்படாது. அசத்தென்பது சூனியம் அன்று. பலவாகவும் சடமாகவும் இருக்கும் அசத்து அழிவுறும். சடமாயினும் ஒன்றாயிருப்பது அழியாது. இங்ஙனம் அழியா இயல்புடையதெனினும் அசத்தானது, சடமாய் இருத்தலின் - சடசத்தாயிருத்தலின் - சத்துப்பொருளைச் சுட்டி அறியாது.

அசத்தும் சித்தொடு கூடின் அறியத் துணைபுரியும். ஆதலால் 'அசத்துத் தான் அறியாது' எனப்பட்டது. சூரியன்முன் இருள் ஒருபோதும் நில்லாது. ஆதலின் இருள் சூரியனை ஒருபோதும் அறியமுடிவதில்லை. அவ்வாறே அசத்துத்தன்மை - சடத்தன்மை - சத்திணிடத்தே நிலையாது; ஆகலின், 'சத்து இது என்று அறியாது அசத்து' என்றார். இதனால் அசத்தெனப்படும் கருவிகளின் இயல்பு உணர்த்தப்பட்டது என்க!

அசத்தைச் சத்து அறிந்து அகலவேண்டா :

அசத்தென்பது சடப்பொருள் எனவும், அறிவில்லது எனவும், நிலையற்றது எனவும், சித்துப்பொருளுக்குக் கருவியாகப் பயன்படுவதெனவும் தெரிவிக்கப்பட்டது. அசத்துப்பொருட்கு மாறாயது சத்துப்பொருள். சத்துப்பொருள்களில் மேம்பட்டது சிவம். சடப்பொருளினும் சிறந்ததும், சிவத்தினும் தாழ்ந்ததுமாயது ஆன்மா. மூன்றினும் மிகத்தாழ்வுடையதே சடசத்துப்பொருள். எனவே சத்துப்பொருள் மூவகைப்படும் என்பது தெரியலாகும். அவை, 1. சிற்சத்து, 2. சிற்சடசத்து, 3. சடசத்து என்பனவாம். இவற்றுள் சிற்சத்தெனப்படும் சிவம் வியபகமாயிருப்பது. சிற்சடசத்தெனப்படும் ஆன்மாக்கள் வியாப்பியமுடையன. சடசத்தெனப்படும் கருவிகள் - தத்துவங்கள் - வியாப்தியாயிருப்பவை. சிற்சத்தாகிய சிவம், எங்கும் நிறைந்தது; வேண்டுதல் வேண்டாமை இல்லாதது; இருவினையில்லது; ஐந்தவித்த ஆற்றலது; தனக்குவமை இல்லாதது. இத்தகைய பொருள், இருந்தாங்கு யாவற்றையும் அறிவது ஆதலின், எதனையும் சுட்டியறிய வேண்டாததாகும். ஆகவே, சடசத்துப்பொருள்

கொண்டு, தனக்கு எதுவும் செய்துகொள்ளத் தேவை யில்லாதது. சடசத்துப் பொருள்களைத் துணையாகக் கொண்டு உண்மை உணர்ந்து, பற்று நீங்கப்பெற்றுச் சித்துச் சத்தோடு ஒன்றுதற்கு இருப்பது ஆன்மாவே ஆகும். உடம்பு முதலிய கருவிகளையும், தன்வினைக் கேற்ப ஆண்டவனால் தரப்பெற்றுச் செயல்புரிவது ஆன்மா. தத்துவங்களை விட்டு அகலற்பாலது ஆன் மாவே; சிவம் அன்று. எனினும், சத்தாகிய சிவமே அசத்தாகிய பாசமனைத்தையும் அறியும் என்பர் சிவாத் துவிதசைவர்.

சத்தாகிய சிவம் வியாபக அறிவுடையதாதலால் எவற்றினையும் உடனாய்நின்று ஒருசேர அறிந்து நிற்கு மேயல்லால், தனித்தனி பிரித்து ஒன்றையும் அறியாது. சடசத்தினிடம் சிவம், உடனாகவே இருப்பது. ஆனால் விளங்கித்தோன்றாது. சித்தாகிய ஆன்மாவினிடத்து விளங்கித் தோன்றும். எவ்வாறாயினும் உடனாய் இருத் தலில் ஒருநிகரதேயாகும். சிவம், வியாபக அறிவுடைய தாயினும், உயிருக்கு உதவுதல்பொருட்டாக அசத்தா கிய கருவி கரணங்களைப் பகுத்தறிதல்கூடும் என்பர் பிறவாதியர். அப்பொழுதும் சிவம் சுட்டியறியாது. சிவமுன்னிலையில் கருவி கரணங்களாகிய அசத்தானது முனைத்து நிற்பதில்லை அன்றே! விகாரமில்லாது நிற்கும் ஆன்மசந்நிதியில் அசத்தாகிய கருவியானது, சிவகரண மாய் நின்று சத்தாகிய சிவத்தை அறியுமாதலின் சத்தா கிய சிவமும், ஆன்மாவும் பகுத்தறிதல் கூடும் அசத் தினை என்று சிவ சங்கிராந்தவாதியர் வாதிப்பர்.

சிவசந்நிதியில் எந்த அசத்தும் நிலைத்துநில்லாது. கருவிகள் அறிவற்றவையாதலின் உயிர் அறிவதற்குத்

துணையாய் நிற்பனவேயல்லாமல் சிவம் பிரித்தறியப் படும் பொருளாவதின்றும். ஆகவே, அசத்தும் அறி யாது; சத்தாகிய சிவமும் அசத்தை அறியாது என்பது தேற்றமாம். பாரிசேட அளவையால், உயிரே அசத் தினையும் சத்தினையும் அறிவதென்பது தெரியலாகும் என்க! "அனைத்தும் சத்தென்னின்" எனத்தொடங்கும் சித்தியார்ப்பாடல் பார்த்தறிதல் இங்கு நன்றும். இக் கருத்துக்களையே 'சத்து (சிவம்) அசத்தை அறிந்து அகலவேண்டா' என்பது கொண்டு நாமறிதல்வேண் டும் என்னலாம்.

**அசத்து இது சத்து இது என்ற ஓர் சத்து (ஆன்மா), இருள் ஒளி அல்லா கண் தகைமையது :**

ஆன்மாவும் சத்துப்பொருளே. அது, சித்சட சத்து என்பது முன்பே கூறப்பட்டது. பதி பாசம் இரண்டினையும் ஆன்மா அறியும். இவ்விரண்டினையும் அறியுமுகத்தால் தன்னையும் ஆன்மா அறியும். சத்தும் அசத்தும் ஒன்றனை ஒன்று அறிதற்கு உரிய உரிமை உடையன அல்ல. அந்த இரண்டையும் அறிவது ஆன்மாவேயாம். ஆன்மாவானது, இது சத்து இது அசத்து எனத் தனித்தறிவது போன்று தன்னைத் தனித் தறியாது. இதனால் ஆன்மாவைச் சூனியம் எனல் ஆகாது. மலரிலே வாசனையானது மலர்போல விளங் கித்தோன்றாது. சூனியமாகவும் இலது. ஆனால் அம் மலரிலே அடங்கித் தோன்றுகிறது.

கண் இருளோடு கூடியபோது இருளாகிறது. ஒளியோடு கூடியபோது ஒளியாகிறது. இருளும் ஒளியும் ஒன்றையொன்று அறிவதில்லை. கண்ணானது

இருளுமன்று; ஒளியுமன்று. இவ்விரண்டிற்கும் இடமாயிருப்பது. எதனைச்சார்கிறதோ அதுவாகிநிற்கிறது. தனித்து நிற்பதில்லை. ஏதாவது ஒன்றைச் சார்ந்தே நிற்கிறது. இதுவே கண்ணின் தகைமை. அதாவது, தானாக ஒன்றை அறிவதுமில்லை; ஒளியோடு கூடின் அறியாமலிருப்பதுமில்லை என்பதாம். இதுபற்றியே, 'இருள் ஒளி அல்லாக் கண் தகைமையது' எனப்பட்டது ஆன்மா.

சத்து அசத்து என்னும் இரண்டின் வேறாகிய ஆன்மா, சத்தோடு கூடித் தன்னைச் சத்தாயும், அசத்தோடு கூடித் தன்னை அசத்தாயும் அறியப்படுவதாம். ஆதலினாலே இதனைச் 'சதசத்து' என்பர். இச்செய்தியைத் தெரிவிப்பது 'அசத்து இது சத்து இது என்ற ஓர் சத்து' எனப்படும் வாக்கியம். ஓர் = அறி; சத்து = ஆன்மா. "சத்தசத் தறிவ தான்மா" என்னும் சித்தியார்ப்பாடல் இங்குப் பார்க்கலாகும்.

**அசத்தைச் சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத்து ஆமே:**

கண்ணானது ஒளியுடன் கூடியபோது, தன்னையும் பிறவற்றையும் அறியமுடியாதபடி மறைக்கின்ற இருளை நீக்கிப் பிரகாசமடைகிறது. ஆன்மாவினிடம் ஒன்றுக்கொன்று விரோதப்பட்டவையாகிய பாச இருளும் ஈசனருளும் ஒருசேர உள்ளன. உலகம் பகலுக்கும் இரவுக்கும் இடமாக இருத்தலை நாமறிவோம். ஒளியும் அநாதியானதே. இருளும் அநாதியானதே. ஒரு பொருளின் இருப்பை ஒளிதான் உணர்த்தவல்லது. இருள், அப்பொருளின் இருப்பைக் கெடுக்கவல்லது அன்று; ஆனால், அந்தப் பொருளின்

இருப்பை மறைக்கவல்லது. ஒளி, இருள் என்னும் இவ்விரண்டனுள் ஒளியைச் சார்ந்து இருளை நீக்கிக் கொள்வதே கண்ணுக்கழகு. காணும்தன்மை என்னும் ஓரளவு ஒளி, கண்ணினிடமிருத்தலால், கண்ணானது ஒளியுடன் உறவுற்றிருத்தலே பொருத்தமுடைத்தாம். ஒளியும் இருளும் கூடியிருத்தல் அரிதேயல்லாமல், கண்ணானது இவ்விரண்டுக்கும் இடமாயிருத்தல் அரிதன்றாம். இந்த ஐயப்பாட்டினையே பிறப்பறுக்கலுறுவார் முதற்கண் தெரிந்து தெளியவேண்டும். வினா வெண்பா நூலில் இந்நூலாசிரியர், "நீடும் ஒளியும் நிறை இருளும் ஓரிடத்துக் கூடல் அரிது" எனத் தொடங்கிக் கூறிப்போதல் காணலாகும்.

ஆன்மாவுக்குச் சுதந்திரமில்லையேயன்றி, அறிவே இல்லை எனல் தவறு. ஆன்மா, தனக்குற்ற கட்டினைத் தானே அறிதலில்லை. இதற்குக் காரணம் அறிவு இன்மை என்பர். ஆனால் ஆன்மா, அறிவுடையது என்ற பெயரைப் பெற்றுள்ளது. ஆன்மாவுக்கு அநாதியே அறிவு உண்டு. கண்ணிடம் ஒளியில்லையாயின் ஞாயிறு முதலிய விளக்கங்கள் இருந்தும் பயனில்லையாய் முடியும். அவ்வாறே ஆன்மாவினிடம் அறிவே இராதிருப்பின் சிவம், மலம், மாயை முதலனவற்றால் பயனில்லாமற்போம். விளக்க விளங்கும் கண் போல் உணர்த்த உணரும் உணர்வு ஆன்மாவுக்கு உள்ளது. ஏகதேசமாய் அறியும் தன்மை உடையது ஆன்மா. ஆன்ம அறிவானது, பெத்தநிலையில் கருவிகளையும், முத்திநிலையில் திருவருளையும் துணையாகக் கொண்டு விளங்கும். ஏகதேச அறிவு சார்ந்ததன் வண்ணமாக விளங்கும் படிகத்தைப் போல்வதாகும் அசத்தோடு சேர்ந்தபொழுது அசத்தாயும், சத்தோடு

சார்ந்தபொழுது சத்தாயும் அழுந்தும் இயல்புடையது ஆன்மா. அசத்தைச் சத்துடன் சேர்ந்து நீக்கவேண்டுவது ஆன்மாவின் கடமையாம். அறிவிக்க அறிதலால் அறிவேயாகிய அருளுடன் ஆன்மா கூடிநிற்கவேண்டி உள்ளது. இவ்வெல்லாம் கருதியே ஆன்மாவைச் 'சத சத்து' என்றுள்ளார் ஆசிரியர். "அறிவு அறியாமை இரண்டும் அடியேன் செறிதலால் ... அறிவோ அறி யேனோ யாது" என்று ஸ்ரீ மெய்கண்டதேவரை ஸ்ரீ அருணந்திதேவர் இருபா இருபது நூலில் வினவியிருப் பதும் இக்கருத்துக்களை எடுத்துரைப்பதேயாம்.

ஆன்மாவானது இருவினையொப்பு, மலபரிபாகம் செய்யும் முயற்சியுறின் சத்திநிபாதம் ஏற்படும். அப் போது சகலாவத்தைக்குள்ள காரியம் பத்தும் நீங்கும். சத்திநிபாதத்துக்கு மூலம் மலபரிபாகம். இருவினை ஒப்புக்கு மூலம் சிவபுண்ணியம். இருவினையொப்பால் சப்தாதி விஷயத்தைப்பற்றிய செயல்நீக்கம் விளையும். சத்தி பதிதலால் கருவிகளின் கூட்டநீக்கம் ஏற்படும். இவ்வாறு படிப்படியாக நீக்கம் செய்துகொள்ள ஆன்மா கடமைப்பட்டிருப்பதை, 'சத்துடன் நின்று நீக்கும் தன்மையால்' என்று ஆசிரியர் இங்குக் கூறலுற்றாராவர். ஆன்மாவுக்குள்ள உயிர் என்னும் பெயரால், உயிர்ப்புடன் கூடியது என்னும் பொருள் பெறப்படும். இதுவே, ஆன்மாவானது கருவிகளுடன் கூடியிருப்பதை அறிவிக்கும் என்னலாம்.

இச்செய்யுளால், ஆன்மா, அறிவுடைப்பொருள் என்பதும், அவ்வறிவு சித்தாகிய சிவத்தைச் சார்ந்து பாசநீக்கம் செய்துகொள்ளவேண்டியுள்ளது என்ப தும் தெரிவிக்கப்பட்டன என்க! அருள் கண்ணாக ஆன்மாவே அறியும் என்பது கருத்தாகக்கொள்க!

## 8. ஆன்மா சிற்றறிவு உடையது

*கண்ஒளி விளக்(கு) அளித்துக்*
*காட்டிடும் என்னின் முன்னம்*
*கண்ஒளி ஒன்றும் இன்றும்;*
*விளக்கொளி கலந்த வற்றைக்*
*கண்ஒளி அகல நின்றே*
*கண்டிடும்; வேறு காணுக்*
*கண்ஒளி விளக்கின் சோதி*
*கலந்திடும்; கருத்(து) ஒன்றுஅன்றே.*

### பொழிப்புரை

*கண்ணுக்கு ஒளியை விளக்குக் கொடுத்துப் பொருளைத் தெரிசிப்பிக்கும் என்று நிமித்த பரிணுமவாதி சொல்லின், முன்பு கண்ணுக்கு ஒரு பிரகாசமும் இல்லையாய் முடியும்;*

*விளக்கொளி கலக்கப்பட்டவற்றைக் கண்ணிற் பிரகாசமானது வேருக நின்றே காணும்; இப்படி அகல நின்று காண்கையிலும் விளக்கொளியோடு காண்டலன்றிக் கண்ணொளிகள் தாமே காணமாட்டா;*

*கண்ணொளியும் விளக்கொளியும் தம்மிற்கலந்து நிற்கும்;*

*கலந்தாலும் பொருந்திய பொருள்கள் அயிக்கத்தால் ஒன்று எனல் இன்றிப் பொருள் இரண்டே என்க.*

குறிப்பு: கருத்து ஒன்று அன்றே என்ற தொடரினுக்குக் கண்ணிற் பிரகாசம் ஒன்றைச் சுட்டிநின்றே காணும்; விளக்கிற் பிரகாசம் ஒன்றையும் சுட்டாமல்நின்றே பிரகாசிக்கும் என்பாரும் உளர். இதனுல், கருத்தா ஆன்மாவுக்கு அறிவைக் கொடுப்பன் என்னும் பரிணுமவாதியை மறுத்துணர்த்தியவாரும்.

## விளக்கவுரை

நிமித்தகாரண பரிணாமவாதியர் எனினும் சிவாத்துவித சைவர் எனினும் வேறல்லர். இவர்கள் நிமித்த காரணமாகிய முதல்வன், மாயையோடும் கூடி முதற் காரணமாகப் பரிணமிப்பன்; பசு பாசங்கள் பதி வியாபகத்தில் வியாப்பியமாய் நிற்பன; தனித்த முதல்களல்ல; மரத்தில் அடங்கிய கிளைகளும் மரமேயாம். சதசத்தும் அசத்தும் எல்லாம் சத்து எனவேபடும்; பதித்தன்மைக்கு வேறாகப் பசுவுக்கு அறியும் தன்மை கிடையாது. பசு ஒரு தனி முதல் அன்று. சத்தாகிய பதிப் பொருளை ஆன்மாவினிடமாக நின்று அறியும்; முப்பொருள்கள் எனக் கொள்ளப்படுவது புறப்பேதம் பற்றியதே; உயிர், சிவத்தின் வேறாகாமையின் உயிருக்காக உண்டாகும் தோற்றம் அழிவு யாவும் சிவத்திற்கே ஆம்; முதல்வன் அறியப்படுபவன் அல்லன்; அறிபவனே. சிவத்திற்குப் பிரபஞ்சத்தைச் சுட்டி அறிவதாகிய சுட்டறிவு உண்டு; இங்ஙனம் சுட்டி அறியமாட்டாதவனாயின் முற்றுணர்வுடையன் எனப்படமாட்டான்; அருவாயிருப்பது சிவம்; உருவாயிருப்பது சத்தி; இவ்விரண்டேயல்லாமல் அசேதனம் என்பது இல்லை. ஆகவே அறிவில்லாப்பொருள் என்பதே கிடையாது; அருவமாய் அறிவாய் இருப்பவன் அனுபவிக்கும்போது இரண்டு பொருள்களும் ஒன்றாயிருக்கும்; தனித்த ஒரு விஷயத்தைச் சுட்டி அறியும்போது விஷயம் எனவும் அறிவு எனவும் இரண்டுபடாமல் பொதுமையாக இருக்கும். கண்ணுக்கு உள்ள திறமை காணுதல்; காண்பது கண்; காணும் திறம் கண்ணினுடையதன்று; அவ்வாறாயின் அது இருட்டிலேயும் காணவேண்டும்; அப்படிக் காண்பதில்லை; மின்மினி ஒளி, இருட்டை நீக்கி

ஒளிர்கிறது: கண் ஒளி இருளை நீக்கக் காண்கிலோம். எல்லாம் சிவசத்தியர் நாடகமே.

"தான் ஒருவனுமே பலவாகி நின்றான்" என்பது திருவாசகம். "ஊனாகி உயிராகி அதனுள்நின்ற உணர்வாகிப் பிறவனைத்தும் நீயேநின்றாய்" என்பது தேவாரம். "காயாகிப் பழமாகிப் பழத்தின் நின்ற இரதங்கள் உண்போனும் தானே ஆகி" என்பது திருப்பாட்டு. "அறிவானும் தானே அறிவிப்பான் தானே" என்பது திருவந்தாதி. "வான் கெட்டு ... நான் கெட்டேன்" என்பது மணிவாசகம். இப்படியெல்லாம் ஆண்டவன் அநுக்கிரகமுடையோர் கூறியிருத்தலினால் ஆன்மா என்றொரு தனித்தபொருளும், அதற்குத் தனித்ததோர் அறிவும் இல்லையென்பதே பொருத்தம். விளக்கொளி கொண்டு காண்பதும் சிவமே. இவ்வாறெல்லாம்நிமித்த காரண பரிணாமவாதியர் கூறுவர். வெளிப்போக்காகக் கருதினால் இக்கூற்றெல்லாம் உண்மை எனவே தோன்றும். எனினும் உண்மை வேறு. அதனை அறிவிப்பதே இச்செய்யுளின் நோக்கமாம்.

மேலே உள்ள கூற்றுக்கள் யாவும் நிராகரிக்கப் பட்டிருத்தலைச் சங்கற்ப நிராகரண நூலில் விரிவாய்க் காணுதல் கூடும். அந்நூல் இவ்வாதீனத்து 121-ஆம் வெளியீடாகும்.

கருத்தா ஐந்தொழில்களையும் தனக்காகச் செய்து கொள்ள வேண்டுவதிலன். அமுதம் உண்டு பசியறப் பெற்றவன், பசிக்காகக் கஞ்சி காய்ச்சுவனா? சித்தினின்றும் அசித்துப் பிறவாது. உடம்பு அறிவுடைப்பொருள் என எவரும் கூறார். எல்லாம் அறிவுடைப் பொருளானால் கடம் - படம் எல்லாம் தாமாகவே சஞ்சாரம்

செய்யநேரிடும். உடல்தோறும் உள்ள உயிர் என்பது பேரறிவின் வேறான பொருளே ஆகும். கண்ணுக்கு விளக்கே ஒளி தந்து பொருள்களைக் காட்டிடும் என்றால், கண்ணினிடத்தில் முன்பு ஒளி இல்லாதிருந்தது என்று ஏற்படும். விளக்கொளிக்கு ஒரு பொருளைச் சுட்டியறியும் அறிவு கிடையாது. விளக்கொளி பல பொருள்களின்மீதும் பட்டுப் பரவியிருக்கும். கண்ணானது தான் விரும்பும் பொருளைமட்டில் சுட்டிக் காணும். இதனால் இப்படிச் சுட்டிக்காட்டும் அறிவு விளக்கினிடம் இல்லை என நாம் தெரியலாம். தன்பால் சுட்டிக்காட்டும் அறிவே இல்லாதபோது கண்ணுக்கு எவ்வாறு விளக்குச் சுட்டிக்காட்டும் அறிவைத் தர இயலும்? ஆகவே, கண்ணினுடைய இயல்பான ஒளிதான், விளக்கின் ஒளியைத் துணையாகக்கொண்டு பொருளைச் சுட்டிக் காண்கிறது என்பது தேறப்பட வேண்டும். விளக்குத்தான் ஒளியற்ற கண்ணுக்கு ஒளி அளித்தது என்பது பொருந்தாது.

அப்படியானால் கண்ணினிடம் ஒளியே இல்லை என்பது பெறப்படும். இது தவறாகும். இருளில் இருக்கும் குருடனைக் காணவிரும்பி வந்தவன் விளக்கைக் கொண்டு அவனைக் காண்பான். ஆனால் அந்த விளக்கைக் குருடன் கையில் தந்து தன்னைக் காணும்படிச் சொன்னால், குருடன், ஒளியிழந்த கண்ணுடையானாக இருத்தலால் காணமாட்டான். இதனால்,கண்ணினிடம் முன்பே ஒன்றைக் காண்பதற்கான ஒளி இருக்க வேண்டும் என நாம் அறியலாம். திரைப்படக் காட்சியின்போது மக்கள் யாவரும் இருளில் அமர்ந்திருக்கிறார்கள். முன்புள்ள திரையில் ஒளி பரவியிருக்கிறது. அவ்வொளியினிடையே உருவங்கள் ஓடுகின்றன.

மக்கள் இருட்டிலே அமர்ந்திருப்பினும் அந்த ஒளியின் உதவியைக்கொண்டு உருவங்களைக் காண்கின்றனர். இருளிலே இருப்பினும் கண்ணினிடம் ஒளி இருத்தலால், அவ்வொளியானது வெளி ஒளியோடு கலந்து உருவங்களைக் காண்கிறது. கண்ணொளிக்கு இருட்டினின்றும் ஒளியுள்ளவிடத்துக்கு ஓடிக்காணும் இயல்பு உள்ளது. ஆகவே கண்ணினிடம் வெளி ஒளியல்லாத தனிப்பட்ட ஒளியொன்றிருப்பது கண்கூடாகத் தெரியப்படுகிறது. இப்படித்தான் ஆன்மாவானது, இறையருள் அறிவிக்க அதன் துணைகொண்டு தன்னறிவால் அறிகின்றது என்னலாம். இங்ஙனம் கூறியவை கொண்டு கண்ணுக்கு ஒளியை விளக்கு அளித்துக் காட்டிடும் என்றல் பொருந்தாக் கூற்றெனப் புகலப்படும். விளக்கே அளிப்பதாயின், முன்பே கண்ணினிடம் ஒளியில்லை என்றேற்படும். இதனை, 'முன்னம் கண் ஒளி ஒன்றும் இன்றும்' என்ற வாக்கியம் சொல்லுகின்றது.

இறைவனும் அறிவே இல்லாதவர்க்கு அறிவைத் தரமாட்டான். அறிவற்ற ஆன்மாவுக்கு இறைவன் அறிவைத் தருவன் என்றால் இறைவனும் அறிவற்றவன் எனக் கருதப்படநேரிடும். இது முற்றும் தவறான கருத்தாம் என்க! "அறிவு ஒன்று இல்லோர்க்கு இறை அருள் உதவுதல் - பிறிவு அறிவு அரிய செறி இருள் இடத்து ஓர் - அந்தகன் காண வந்தோர் எம்மை - நீவிரும் காணவேணும் என்று ஆங்கு - எடுத்து ஒரு தீபம் கொடுத்ததை ஒக்கும் - இச்செயற்கு இறைவன் கொச்சையன் அன்றே" எனவரும் சங்கற்பநிராகரண நூல் வரிகளின் பொருளை ஈண்டு அறிதல் பொருந்தும் எனலாம்.

**விளக்கொளி கலந்தவற்றைக் கண் ஒளி அகலநின்றே கண்டிடும் :**

விளக்கொளியானது குறிப்பிட்ட ஒரு பொருளின் மீது மட்டும் பரவுவதில்லை. தன் வியாபகத்துட்பட்ட எல்லாப் பொருள்கள்மீதும் ஒளியைப் பரவவிட்டிருக் கும். இதனால் விளக்குக்குக் குறிப்பிட்டு ஒருபொருளை மட்டும் கண்ணுக்குக் காட்டும் அறிவு கிடையாதென் பதுவெளிப்படை. கண்ணனது தான் ஒளியில் இருப் பினும் அன்றி இருளில் இருப்பினும் தான் விரும்பும் பொருளைமட்டும் சுட்டிக்காணும் தன்மைபெற்றிருக் கின்றது. இதனால் கண்ணுக்குத்தான் இங்ஙனம் சுட்டி யறியும் அறிவு உள்ளது என்பது வெளியாகின்றது. ஆனால் கண்ணொளியானது இருளில் இருக்கும் பொருளைத் தன்னொளியொன்றை மட்டும் கொண்டு காணமுடிவதில்லை. விளக்கொளியின் துணைகொண்டு தான் நயக்கும் பொருள்களையே சுட்டிக்காண்கிறது. விளக்கொளி வியாபித்திருக்கும் எல்லாப் பொருள் களையும் ஒருசேரக் காண்பதில்லை. சூரியனொளி பரவி யிருக்கும் வான்பரப்பு முழுவதையும் கண் காண்ப தில்லை. தன் காணும் சக்திக்கு ஏற்ற எல்லையுட்பட் டதையே காண்கிறதை நாம் அறிவோம். மற்றும் இருளில் தான் இருப்பினும், ஒளிப்பரப்பினுட்பட்ட பொருளைத் தன் ஒளியை வெளி ஒளியோடு கலக்க வைத்துக் காண்கிறது. இதனால் கண்ணொளி வேறு; விளக்கொளி வேறு என்பது தெரியலாகும். ஆனது பற்றியே, 'கண் ஒளி அகல நின்றே கண்டிடும்' என் றுள்ளார் ஆசிரியர்.

**வேறுகாணக் கண்ஒளி விளக்கின்சோதி கலந்திடும் :**

கண்ணொளி வேறு; விளக்கொளி வேறு என்பது முன்னே கூறப்பட்டது. ஆயினும் காட்சியின்போது இரண்டும் வேறுவேறுபட்டுக் காணப்படுவதில்லை. தூல ஒளியாயிருப்பது கண்ணொளி. சூக்கும ஒளியாயிருப்பது விளக்கொளி. இந்த இரண்டும் ஒன்றுபட்டுக்கலந்து நிற்கும் நிலை உற்று நோக்கவல்லார்க்கும் பிரித்து அறியமுடிவதில்லை. ஆகலின், 'வேறு காணா' எனப்பட்டது. கண்ணொளியாய்க் காணுகின்றபோது காணும் தன்மை முனைத்துத் தோன்றும். அப்போது விளக்கொளி பிரித்தறியவருதலில்லை. அன்றி, விளக்கொளியாக் காணும்போது காட்டும் தன்மை முனைத்துத்தோன்றுமாதலின் கண்ணொளி பிரித்தறிய வருதலில்லை. மற்றும், கண்ணொளி இது, விளக்கொளி இது எனப் பிரித்துக் காணப் புகுந்தாலும் காணும் தன்மையே முற்பட்டுத் தோன்றலுறும். அப்போது விளக்கொளியானது திரிவுபுலனாகக் காட்சிப்படுவதல்லாமல் தெளிவுபுலனாகக் காட்சிப்படுவதில்லை. 'வேறு காணா' என்பதுகொண்டு இக்கருத்தும் அறியப்படும்.

ஒரு விஷயத்தில் வீழ்ந்த கண்ணொளிகள் பலவும் தம்முள் ஒன்றையொன்று காணுவதுமில்லை; காட்டுவதுமில்லை. கண்ணொளிகள் தமக்குள் கலக்கும் இயைபு பெற்றில்லை. ஆனால், கண் விளக்கைக்காண்டலும், விளக்குக் கண்ணுக்குக் காட்டலும் ஆகிய இயைபு இருக்கிறது. கண்ணொளி விளக்கொளிக்குள் இயைபு இல்லாவிட்டால் காண்டல்தொழில் நிகழாமற் போம். விளக்கொளியைக் கண் காணுங்கால் அது வதுவாய் நின்று காணும். அதாவது தன்னையும் அவ் விளக்கொளிவண்ணமாய் நின்று காணும் என்பதாம். ''நின்னைக் காணா மாந்தர், தம்மையும் காணாத்தன்மை

யோரே ” என்ற இடத்து இத்தத்துவம் பொருத்தப் படுதலைத் தேசிகர் திருவாக்குக்களால் அறியலாம்.

கண்ணொளியானது எந்த எந்த ஒளியோடு கூடினும் அந்தந்த ஒளிவடிவாய்க் காணப்படும்; தனித்துக் காணப்படுவதில்லை. தனித்துக் காண்டல் மயக்கக் காட்சியேயாகும். விளக்கொளியின்முன் கண்ணொளியின்சத்தி மடங்கிப்போதல் இன்ரும். கண்ணொளியானது. துணையொளி சிறிதாயின் சிறிதாயும், பெரிதாயின் பெரிதாயும் விளங்கும் இயல்புடையது. கண் முதலிய இந்திரியங்கள் அவ்வவற்றுக்குரிய விஷயங்களை அந்த அந்த விஷயங்களோடு கலந்தே அறியும். கலவாமல் விஷங்கள் முன்னே நின்ற அளவில் அறிதலில்லை. அறியுமாயின் முன்னே நின்ற எல்லாப்பொருள்களையும் ஒருங்கே அறியவேண்டும். ஒன்றை அறியுங்கால் பிறிதொன்றை அறிவதில்லை. ஆதலால், கலந்தே அறிதல் வெளிப்படையாம். இந்திரியமாகிய கண்ணொளிக்கும் விஷயமாகிய விளக்கொளிக்கும் தம்முட்கலப்பில்லை என்பது பிரத்தியட்ச விரோதமாம். இவையெல்லாம் கருதியே, ‘கண் ஒளி விளக்கின் சோதி கலந்திடும்’ என்றுள்ளார் ஆசிரியர் எனலாம். இதனை accommodation power என்பர் விஞ்ஞானரீதியில். This is a remarkable property of the eye என்பர்.

**கருத்து ஒன்று அன்றே:**

கண்ணொளியும் விளக்கொளியும் ஒன்ருகும் என்பதனால் ஒளி ஒன்றே எனக்கொள்ளுதல் கூடாது. கண்ணொளி விளக்கொளிகளின் கலப்பு ஒன்றேயல்லாமல் ஒளிகளே ஒன்ருதல் இல்லை. ஒளிகள் அத்துவிதப்படுத

லால் ஒன்றே எனப்பட்டதல்லால் பொருள்கள் இரண்டும் ஏகமாகிவிட்டன என்பது கருத்தன்றும். விளக்கொளி வேறு; கண்ணொளி வேறுதான். காட்சியின் பொழுது இவை கலந்து ஒன்றுகின்றன. ஆதலால் பொருள்தன்மையில் இரண்டேயன்றி ஒன்றென்பது இல்லை என்பதைக் 'கருத்து ஒன்று அன்றே' என்பது உணர்த்திநிற்பதாம்.

## 9. ஆன்மா அறியும் முறைமை

*ஓர்இடத்(து) இருத்தல், மாயா*
*உருநிறைந் திடுதல், ஒன்றும்*
*பேரிடத்(து) உறைதல், தானே*
*பிறங்(கு) அறிவாகி நிற்றல்,*
*சோர்(வு)உடைச் சடம்நி கழ்த்தல்,*
*எனும்இவை சொல்லார் நல்லோர்,*
*ஓர்இடத்(து) உணரும் உண்மை*
*ஒளிதரும் உபலம் போலும்.*

### பொழிப்புரை

யோகிகள், ஆன்மாத் தேகத்தில் ஏகதேசத்தில் இருந்து அறியும் என்னும் அதுவும்,

சமணன், மாயாகாரியமான தேகத்தில் நிறைந்து நின்று அறியும் என்னும் அதுவும்,

மாயாவாதி, ஆகாயம்போல் எவ்விடத்தும் பூரணமாய் நின்று அறியும் என்னும் அதுவும்,

சாங்கியனும் அயிக்கவாதியும் அவிகாரவாதியும் ஒருகருத்தா அறிவியாமல் ஆன்மாத்தானே உயர்ந்த அறிவாய் நிற்கும் என்னும் அதுவும்,

நியாய வைசேடிகர், குற்றத்தை உடைய மனம் முதலிய கருவிகள் அதற்கு அறிவைக்கொடுக்கும் என்னும் அதுவும்,

என்று எண்ணப்படும் இவற்றைச் சைவசித்தாந்திகள் சொல்லார்கள்.

ஆன்மா அறியும் உண்மையை விசாரிக்குமிடத்து விளக்கம்தரும் படிகம் போல - அடுத்ததன் தன்மையாய் நின்று அறியும்.

குறிப்பு: உணரும் உண்மை ஓர் இடத்து என்பிது அந்வயம். ஓர் இடம்: வினைத்தொகை.

1. ஓர் இடத்து இருப்பின், ஏகதேச உருவாய்ச் சடமாய் மற்றுள்ள இடங்களில் அறிவும் அற்று அழியும்.

2. உடல்முழுதும் நிற்பின், அவத்தைப்படும் குற்றமும், உடல் வளர வளர்ந்து சிறுகச் சிறுகுதல் ஆகிய "சங்கோச விகாசதன்மம்" என்னும் குற்றமும், இந்திரியம் ஐந்தும் புலன்கள் ஐந்தையும் ஒருகாலத்தில் நுகராத குற்றமும், உடல் வளர்ந்து சிறுகச் சிறுகுதலாகிய அவயவம் குறைய ஆன்மாவும் சின்னபின்னப்படும் குற்றமும் ஏற்படும்.

3. எவ்விடமும் நின்று அறியில், போக்கு வரவு உடைய குற்றமும், ஒருவன் கருத்தை ஒருவன் அறியான் என்னும் குற்றமும் தங்கநேரிடும்.

4. தானே அறியின், அவத்தைப்படுவதும், ஒருவர் அறிவிக்க அறியும் குற்றமும் கருவிகளால் அறியும் குற்றமும் உளவாம்.

5. கருவிகள் அறிவைக் கொடுப்பின், ஆன்மாவுக்குச் சடத்துவம் உண்டாம். அறியும் சடமான கருவிகள் ஒன்றுக்கு அறிவைக் கொடுக்கமாட்டா.

ஆகையால் இவை முழுவதூஉம் நல்லோர் சொல்லார். ''ஓர்வு உடைத்து'' என்பதூஉம் பாடம்.

இப்பாடல், இப்படிப்பட்ட ஆன்ம இலக்கணத்தைப் பரசமயிகள் வேறு வேறு கூற அவற்றை நிராகரித்து அதன் உண்மையை உவமைமுகத்தால் உணர்த்திற்று.

## விளக்கவுரை

ஆன்மாவைப்பற்றிப் பலர் பலப்பல விதமான கொள்கை உடையவர்களாவர். அவர்தம் கொள்கைகளில் வேண்டாதனவற்றை இதன் முன்னர் உள்ள பாடல்களில் காரணங்காட்டி மறுத்து விளக்கம் செய்துள்ளார் ஆசிரியர். ஆன்ம அறிவுபற்றி வேறு வேறு கருத்து உடையவர்களும் உளர். அவர்களில் சிலர் கொள்கைகளை இத்திருவிருத்தத்தால் கூறலுறுகின்றார் ஆசிரியர்.

ஆன்மா அணுவளவினதென்பர் பாஞ்சராத்திரியர். ஆன்மாவின் வடிவம் அணுவளவன்று. ஆன்மாவின் வடிவம் ஞானமே. ஆன்மாவை, அநாதி பெத்த சித்து என்றும் கூறுவர் பெரியோர். ஆன்மா அந்தக்கரணத்துடன் கூடி இருதயத்தில் நின்றுகொண்டு கண் முதலான பொறிகளின் வழியாய் விஷயங்களைக் கிரகிக்கும்போது, அப்படிக் கிரகிக்கின்ற ஆன்மாவானது அந்த அவத்தையில் மனம், இந்திரியம், விடயம் என்பவைகளில் அதிசூக்குமமாய் நிற்றலால் வேதங்களில் 'அணு' என்று கூறப்பட்டுள்ளதே அல்லால் உண்மையில் ஆன்மாவின் வடிவம் அணு அன்று என்பது சித்தாந்தம்.

இனி மிருதிநூலார், புல்லின் நுனியில் இருக்கும் நீர்த்துளிபோன்று, ஆன்மா உடம்பினிடத்தே இதயத்

தானத்தில் மிகச்சிறியதாய் நிற்கும் எனவும், அதன் அறிவு எவ்விடத்தும் வியாபிக்கும் என்றும் கூறுவர். இவர்தம் கருத்தையே 'ஓரிடத்து இருத்தல்' என்று கூறிக்காட்டுகின்றார் ஆசிரியர்.

சித்தாந்தத்துக்கு இக்கருத்துப் பிழைபட்டதாகும். ஆன்மா ஓரிடத்து மட்டில் இருப்பதானால் உருவம் உடையதாகும். ஆன்மாவை உருவப் பொருள் என்பது பவுராணிகரின் கொள்கையாகும். இந்தக் கொள்கையை மறுத்துரைப்பது சித்தியாரில், "உரு உயிரென்னின்" என்னும் பாடலாகும். அங்குப் படித்தறிதல் இங்குத்தைக்குத் தக்கதாகும். குணமானது, குணத்தையுடைய பொருளளவில் நிற்பது; பொருளின் வேறாய் நில்லாது; வியாபிக்காது. விளக்கின் ஒளி, விளக்கின் சூக்கும வடிவேயன்றி விளக்கின் குணமன்று. விளக்கின் குணம் என்பது அதன் சூடே ஆம். விளக்கின் சுடரைத் தொட்டால் சுடுகிறது. ஆன்மாவும் இருந்த இடத்தைத் தொட்டால் அறிவதேயன்றி உடம்பின் எந்த இடத்தைத் தொட்டாலும் அறிதல் கூடாது. ஆனால் உடம்பில் தொட்ட இடத்திலெல்லாம் உணர்ச்சி ஏற்படுகின்றது. மற்றும், விளக்கு, தான் ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒரே காலத்தில் மற்றுள்ள இடங்களை விளக்குகிறது. அம்மாதிரி ஆன்ம அறிவு ஒரேகாலத்தில் ஐம்பொறி வழியாக ஐந்து விஷயங்களையும் அறியவேண்டும்; அப்படி அறிவதில்லை. ஆகையால், ஆசிரியர் ஆன்மாவினை 'ஓர் இடத்து இருத்தல் சொல்லார் நல்லோர்' (சித்தாந்தியர்) என்றுள்ளாராவர். இவ்விடத்தே, "உடலினின் ஏக தேசி உயிரெனின்" எனத்தொடங்கும் சித்தியார்ப் பாடலுரை படித்து அறிதல் பயன் தருவதாகும். ஏகதேசி=

சுடர் ஒளிப்பண்பு உடையது. இவற்றால் ஆன்மாவின் உருவம் அணுவன்று என்பதும், அது உடம்பில் ஏக தேசமாய் நிற்கும் என்பதும் பொருந்தா என மறுக்கப் பட்டதாயிற்றென்க.

மாயா உரு நிறைந்திடுதல்...சொல்லார் நல்லோர்:

மாயா உரு எனினும், மாயா இயந்திரதனு எனினும் ஒன்றே. இத்தொடர்கள் உடம்பைக் குறிக்கும். சமணர், உடம்பளவாக உயிர் நிறைந்துநிற்கும் என்றும், அந்த உடம்பால் உயிரானது விடயங்களை அறியுமென்றும் உரைப்பர். அப்படியாயின், தூல உடம்பு நீங்கிய சொப்பனுவத்தையும், தூலம் - சூக்குமமென்னும் இரண்டு உடம்பும் நீங்கிய சுழுத்தி அவத்தையும், பொருந்தியிருக்க நியாயமில்லை. எல்லா உடம்போடும் கூடியிருப்பது சாக்கிராவத்தை. அப்போது ஐம்பொறியினும் ஏககாலத்தில் அறிவு நிகழவேண்டும். அப்படி நிகழக் காண்கிலோம். அதுவல்லாமல், பெரிய உடம்பாயின் பெரிய அறிவும், சிறிய உடம்பானுல் சிறிய அறிவாயும் அமையநேரிடும். மற்றும் உடம்பில் ஓர் அங்கம் குறையநேரிடின் உயிரும் ஒரு பாகம் குறைய நேரிடும். உடம்பு அழியுங்கால் உயிரும் முற்றும் அழிந்துபோக நேரிடும். ஆதலால், சமணர்களுடைய இந்தக் கருத்தைச் சித்தாந்தியர் ஏலார். இக்கருத்தினை, "உருவினில் நிறைந்து நின்று" என்னும் சித்தியார்ப் பாடலாலும் தெரியலாம்.

ஒன்றும் பேரிடத்து உறைதல்...
சொல்லார் நல்லோர் :

மாயாவாதியர் ஆகாயம்போல் உயிர் எவ்விடத்தும் பூரணமாய் நின்று அறியும் என்பர். இவர்கள் ஆன்மா,

பிரமம்போல் வியாபகம் உடையது என்பர். மற்றும் ஐக்கியவாதியரும் உயிரானது முதல்வன் போலவே எங்கும் வியாபியாய்நின்று அறியும் என்பர். இவர்கள் சொல்வதுபோல் எவ்விடத்தும் உயிர் வியாபித்தறிவ தாயின், விழிப்புநிலை முதலான ஒவ்வோரவத்தைகளில் உயிர் தங்காது. பிறப்பும் இறப்புமாகிய போக்குவரத்து களைப் புரியாது. ஐம்பொறிவழியாக ஐந்து விஷயங்களை யும் ஏககாலத்தில் அறிவதுமில்லை. ஆதலால், உயிர், முதல்போல வியாபக முடையதன்றென உணரலாகும். முதல்வனும் எல்லாமாய் வியாபித்து நிற்றலை ஒழித்து உடம்பினுள் ஏகதேசப்பட்டு நிற்றற்கும் இயலான். இத்துணை மறுப்புக்களாலும், 'ஒன்றும் பேரிடத்து உறைதல்' செல்லாதென நாம் தெரிதல்கூடும்.

வேறு சிலர், உருவப்பொருள் அனைத்திலும் கூடு வதே வியாபகம் என்பர். அவை யாவற்றையும் அறி வதே முற்றுணர்வு எனவும் கூறுவர். இவர்கள் கூற் றுப்படிக் கொள்வதாயின், சங்காரகாலத்தில் எல்லாப் பொருளும் அழிந்திடும்போது உயிரும் அழிந்துபோக நேரிடும். அப்படி அழிந்துபோகுமானல் மறுபடியும் படைப்பு நிகழக் காரணமிராது. ஆகவே, எல்லாம் அழியும் சங்காரத்தின் பின்னரும் உயிர் இருந்தே தீரு தல்வேண்டும். உயிரிருந்து, ஏனைப்பொருள்கள் யாவும் இல்லை ஆதலால், உருவப்பொருளைக் கூடிநிற்றலை வியாபகம் என்றல் பொருந்தாதென்க!

தானே பிறங்கு அறிவாகி நிற்றல்...
சொல்லார் நல்லோர் :

சாங்கியரும், அயிக்கவாதியும், அவிகாரவாதியும் ஒரு கருத்தா அறிவிக்கவேண்டாமல், ஆன்மாவானது

தானே முற்றறிவாய் (விளக்கமுற்ற அறிவாய்) நின்று அறியும் என்பர். ஆன்மா, முதல்வனைப்போன்று எங்கும் வியாபகமாய் நின்று அறியும் தன்மை உடையது எனினும், சிற்சில குறைபாடுகளால் ஏகதேசமாய் அறிகிறதல்லால் மற்றில்லை என்பர். ஆன்மா, சுத்தமுடையதேயாயினும் அதன் அறிவைக் குற்றமுள்ளதான மாயா காரியமாகிய தனு கரண முதலனகூடித் தடை செய்கின்றன. இதனால் விழிப்புநிலை முதலன ஏற்படுகின்றன. பிறப்பு இறப்புக்களில் போக்கு வரவு புரிதலும் ஏற்படுகின்றது; ஐம்புலன்களை ஒருசேர அறிதலின்றி ஒவ்வொன்றாய் அறிதல் நிகழ்கின்றது. இந்த விதமான காரணங்கள்பற்றியே ஆன்மாவுக்கு அறிவு ஏகதேசப்படுதலாகிறது என்று வாதிப்பர் சிலர்.

மாயா காரியமாகிய இந்திரியங்களாலும் அந்தக் கரணங்களாலும் ஆன்மாவுக்கு அறிவு விளங்குவதல்லால், அறிவைக் கரணங்கள் தடைசெய்கின்றன என்றல் மாறுபாடு உடைய கொள்கை ஆகும். மற்றும் சுத்தமாயிருக்கும் தன்மை வாய்ந்த ஆன்மா மாயாகாரியத்தால் தடைப்படுகின்றதென்றால், மாயாகாரியங்களை விட்டு நீங்கிய முத்திக்காலத்திலும், முன்பு சுத்தமாய் இருந்தபோது பற்றியவாறே மீண்டும் பற்றக்கூடும். இதனால் முத்திப்பேறென்பதே இல்லையாய்முடியும்.

வீடுபேற்றின் பின்னர் மாயாகாரியத்தை ஆன்மா பற்றாது என்றால், முன்பு சுத்தமாயிருந்தபோதும் பற்றாதிருக்கவேண்டும். சுத்தமாயிருந்தநிலையில் பற்றுவது உண்டு எனின், மீண்டும் சுத்தமுற்ற நிலையிலேயும் பற்றுதல் ஏற்பட்டேதீரும். ஆகையால், ஆன்ம அறிவு வியாபகமுள்ள தன்மையதென்பது தவறாம். இக்கருத்

துக்களைச் ''சுத்தமாம் ஆன்ம சித்தை'' எனத் தொடங்கும் சித்தியார்ப் பாடலால் அறியலாகும். கருத்தா அறிவிக்க அறிதலே ஆன்ம அறிவின் இயல்பாமென்க.

சோர்வு உடைச் சடம் நிகழ்த்தல்......
சொல்லார் – நல்லோர் :

அறிவு இச்சை செயல்கள் ஆன்மாவுக்கு இல்லை என்றும், ஆன்ம சந்நிதியில் கரணங்கட்கே உண்டு என்றும் கூறுவர் சாங்கியர். அறிவு இச்சை செயல்கள் குணமாம். ஆன்மாவோ குணி. இப்படி இருத்தலால் ஆன்மா அறிவு மாத்திரையாய் இருக்கும் என்றும் கூறுவர். அப்படியானால் உடம்பினிடத்தே அறிவு மட்டும் நிகழ்தல்வேண்டும். ஆனால், அறிவு இச்சை செயல் என்ற மூன்றுமே உடலினிடம் நிகழக்காண்கிறோம். ஆதலால் அறிவுமாத்திரையது ஆன்மா என்றல் பொருத்தமற்ற கூற்றாம்.

உயிரின் சந்நிதியில் உடல் முதலிய கரணங்கள் தொழிற்படுதலால் அறிவாதிய மூன்றும் நிகழ்கின்றன; இதுகொண்டு ஆன்மாவுக்கும் இம்மூன்றும் உண்டு என்றல் பொருந்தாது என்பர் சாங்கியர். அப்படியானல் அறிவு வியாபகப்பட்டுள்ள ஆன்ம சந்நிதியில் உடம்பு பிணமானபோதும் உறங்கும்போதும் மேற்கூறப்பட்ட மூன்றும் நிகழவேண்டும். அப்படி நிகழக் காண்கிலோம். கரணங்கள் ஒடுங்கிவிட்டதே காரணம் என்று வாதிப்பர் இவர்கள். கரணங்கள் ஒடுங்கினாலும் உயிரின் சந்நிதிக்குக் கேடில்லை ஆதலால், சந்நிதிமாத்திரை என்பது செல்லுபடியாகாது. எனவே, ஆன்மாவின் குணமாகிய அறிவு இச்சை செயல்களின் தொழிற்பாட்டால் கரணங்கள் தொழிற்படுமே அல்லாமல்

கரணங்கள் தாமே தொழிற்படமாட்டா. ஆனமை யால், 'சோர்வு உடைச் சடம் நிகழ்த்தல்' என்பார் கூற்றுச் சரியானதன்றும். ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் தொழில் செய்வதற்கு ஏதுவாய் ஆன்மா வினிடம் குணமாயிருந்து தொழிற்படுதலால் உடம்பு தொழிற்படுகிறதே அன்றி, ஆன்மா சும்மா இருக்கத் தொழிற்படுதலில்லை கரணங்கள் யாவும் என்பதைச் 'சோர்வு உடை' என்ற தொடரால் அறியலாகும்.

காந்தத்தின் முன்னர் இரும்பு தொழிற்படுவது போல ஆன்மசந்நிதியில் உடம்பு தொழிற்படும் என்றும் சாங்கியர் சொல்லுவர். காந்தத்தின் முன்னர் இரும்பு இழுக்கப்படுமே அல்லாமல், அகற்றப்படுதலாகிய மாருன தொழிற்படாது. ஆன்மசந்நிதியில் கரணங்கள், நினைத்தல் × மறத்தல், ஓடல் × நிற்றல் முதலான மாறு பட்ட தொழில்களைச் செய்தல் காண்கிரேம். ஆதலால் இந்த உவமை ஏற்புடைத்தன்றும் என்க! "ஈர்க்கும் முறைமை உண்டு அகற்றல் இன்றும்" என்பது சித்தி யார் நூல். இவ்வாறெல்லாம் சித்தாந்தியரல்லாதவர்கள் கூறும் கொள்கைகளைக் கேட்டு மயங்கமாட்டார்கள் சித்தாந்த சைவராதலால் 'எனும் இவை சொல்லார் நல்லோர்' என்றுள்ளார் ஆசிரியர். வீண்வாதம் செய் யாமல் பகுத்தறிவுடன் எதிரிகளும் ஏற்கும் முறையில் நல்லமுறையிலே தருக்கநெறிபற்றிச் சித்தாந்தியர் இன் முறையில் எடுத்து உரைப்பவர் ஆதலின் அவர்களை 'நல்லோர்' என்றுர். அபிமானத்தால் அன்று எனக் கொள்க!

ஓர் இடத்து உணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும் :

ஓர் இடத்து = ஆராயுமிடத்து; ஆன்மாவுக்கு அறிவு உண்டு. அது கருவிகளின் துணைகொண்டு அறிய வல்லதே. ஆயினும் அது உள்ளீடாய்க் காணின் அறிவிக்க அறியும் இயல்புடையதாகும். அவ்வாறுதலினால் ஆன்மாவானது சத்தையும் சாரவல்லது; அசத்தையும் சாரவல்லது என்பது பெறப்படும். இந்தச் சகலநிலையிலும் மாயாகாரியங்களைச் சார்ந்துள்ளபோது மயங்கிய அறிவுடையதாயிருக்கும். மலபரிபாகாதிகள்பெற்றபின் சுத்தப்படும் நிலையில் அருளைச்சார்ந்து அறிவுமயமாக விளங்கும். இதனாலேயே சார்ந்ததன் வண்ணத்தது ஆன்மா எனப்படுகிறது. ஒருசார்புமின்றித் தனித்துச் சுதந்தரமாயிருக்கும் தன்மை ஆன்மாவுக்கு இலது. முகம்பார்க்கும் கண்ணாடி எந்தப் பொருளைச் சார்ந்துள்ளதோ அந்தப் பொருளின் வண்ணத்ததாக விளங்கும். ஆனால், மரக்கட்டை, செங்கல் முதலியன அப்படியிருக்கமாட்டா. காரணம் அவற்றினிடம் பிரதிபலிக்கும் ஒளி இல்லை. உபலம் - கண்ணாடியினிடத்தில் இயல்பாகவே ஒளி உள்ளது. அதனால் சார்ந்ததன் வண்ணங்கொள்ளக் கண்ணாடியினால் முடிகின்றது. அவ்வாறே ஆன்மாவும் அசுத்தத்தைச் சார்ந்தபோது அசுத்தமாயும், சுத்தத்தைச் சார்ந்தபோது சுத்தம் உடையதாகவும் ஆகின்ற இயல்பினை இயல்பாகவே கொண்டுள்ளது. ஆகவே, ஆன்மாவின் உணர்ச்சி அது சாரும் பொருளைச் சார்ந்ததாக உள்ளது என்னலாம். இதுபற்றியே, 'ஓர் இடத்து உணரும் உண்மை ஒளி தரும் உபலம் போலும்' எனப்பட்டுள்ளது.

இதனால், சித்தாந்த நெறிப்படி ஆன்ம இலக்கணம் இன்னது எனத் தெரிதல் சிறப்புடைத்தாம்.

சித்தாந்த நெறிப்படி, ஆன்மாவானது சார்ந்த பொரு ளிடத்து அப்பொருளளவாக வசிப்புண்டு வியாபித் திருக்கும் ஏகதேச வியாபகம் உடையதாய், இச்சை - ஞானம் - கிரியை என்கிற குணங்களைக் கொண்ட தாய் இருப்பதாகும். இச்சை - ஞானம் - கிரியை என் னும் குணங்களை உடையதாயிருப்பினும் அநாதியே பற்றிநிற்கும் ஆணவ மலத்தினால் தொழிற்படாமல் மறைப்புண்டிருக்கும். ஆகவே, தூலசித்தாக இருப்ப தாகும். இங்ஙனம் கட்டுப்பட்டிருத்தலால் பசு எனப் படுவதாம்.

எவ்வகையாலும் அசித்தாகாத வியாபகப் பொரு ளாகிய இறைவனைப் போன்ற பூரண வியாபகம் ஆன் மாவுக்கு இலது. இறைவன் அதிசூக்கும சித்தாவன். ஆன்மா அங்ஙனமில்லது. தூலசித்து=பசு; சூக்கும சித்து=ஆன்மா; அதிசூக்குமசித்து=சிவம். தூலசித்து என்பது மற்றொன்றின் உதவியால் அறிவதாகும். அதி சூக்குமசித்து என்பது தானே அறிவதாகும். தூல சித்துக்குக் கண்ணொளி உவமையாம். அதிசூக்கும சித்துக்குச் சூரியவொளி உவமையாம். உயிரினுடைய பெத்தநிலை பசுவும் முத்திநிலை ஆன்மாவும் ஆம். முத்தி யில் அருளின் உபகாரம் இருந்தாலும், தனித்திராமை யால் உயிர் சூக்குமசித்து எனப்படும். இது உயி ருணர்ச்சியுடன் கூடிய கண்ணொளி போல்வதாகும். இங்கு, "அசித்தரு வியாபகம் போல்" என்னும் சித்தியார்ப்பாடல் அறிதல் தக்கதாம்.

மற்றும், சுத்த ஸ்படிகமானது இருளில் அகப் பட்டபோது இருள்வயப்பட்டு இருள்நிறமாய் இருக் கும் என்றும், பஞ்சவன்னங்களோடு கூடியபோது

அந்தப் பஞ்சவன்னநிறமாய் இருக்கும் என்றும், ஒளியுடன் கூடியபோது ஒளி தானாய் நிற்கும் என்றும் விளக்கம் கூறப்படும். கேவலத்தில் மலத்தோடு கூடி அறியாமையாக ஆன்மா இருக்கும். சகலத்தில் கலை முதலிய தத்துவங்களோடு கூடித் தத்துவ வன்னரூபியாக இருக்கும். இந்த இரண்டும் நீங்கிய அருள் மேலிட்ட அவதரத்தில் அந்த அருளோடுங்கூடி அறிவாயிருக்கும் என்பது கருத்தாம். ஸ்படிகம் முற்றுவமையாகக் கொள்ளப்படின் இம்மூன்றுவித நிலைகட்கும் பொருத்தி உரைக்கப்படும். இவ்வாறன்றிச் சகல நிலைக்குமட்டும் ஏற்புடைத்து எனக்கொள்ளின் பஞ்சேந்திரியங்களோடும் ஆன்மாக் கூடிநிற்கும் என்பதைத் தெரிவிக்கும். "கேவலம் சகலம் சுத்தம்" என்று தொடங்கிக்கூறும் சித்தியார்ப்பாடல் இங்கு மேற்கோளாகக் கோடல் பொருத்தமுடைத்தாம். இங்ஙனம் ஒன்பது பாடல்களின் பொருள்களைக்கொண்டு ஆன்ம இலக்கணம் முழுதும் அறியலாகும் எனலாம்.

மூன்றும் சூத்திரச்செய்தி முற்றிற்று.



மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கு

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.